உ

முருகா

# பவளேந்திரி

(பவளேந்திரி, தணிகைநாயகி,
மங்கையும்-நங்கையும், அழகம்மை)




ஆசிரியர் :

கிருபானந்தவாரி



திருப்புகழமிர்தம் காரியாலயம்
89, சிங்கண்ண செட்டித் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

 [விலை ரூ. 1-00

உ

முருகா

# முன்னுரை

"பெண்ணில் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்"

என்ற திருவள்ளுவ தேவரது திருவாக்கின்படி கற்பென்பது மிகவும் புனிதமானது. கற்புடை மகளிர் கனலினும் விழுமியவர். கற்புடை மாதர் கட்கு ஐம்பூதமும் அடங்கும். நமது நாடு கற்புடை மாதர்கள் பலரை ஈன்றெடுத்த புண்ணிய நாடு. சீதாதேவியின் அறக் கற்பையும் கண்ணகி தேவியின் மறக் கற்பையும் அறியாதவர் யார்?

பவளேந்திரி யென்னும் இவ் வரலாற்றை எமது பிதாவிடம் கேட்டனன். அதனைச் செப்பம் செய்து மெருகிட்டு, நமது திருப்புகழமிர்தத்தில் தொடர்ந்து வெளியிட்டனன். பவளேந்திரி தனிப் புத்தகமாக இருமுறை வெளிவந்தது. இப்பொழுது அதனுடன் தணிகைநாயகி, மங்கையும்-நங்கையும், அழகம்மை என்ற மூன்று சிறு கதைகளும் சேர்ந்து வெளியாகின்றது.

அமிழ்தினும் இனிய தமிழகம் இதனைப் படித்துப் பயன் பெறுமாக.

அன்பன்,

கிருபானந்தவாரி.

# உள்ளடக்கம்

உ

முருகா

# பவளேந்திரி

வீரவர்மன், "பெண்ணரசே ! கந்தக் கடவுள் திருவருளால் நமக்கு இரு மைந்தர்கள் பிறந்தார்கள். நல்ல அறிவும் அடக்கமும் உடையவர்களாக இருந்தார்கள். ஆனுல், நாம் செய்த தீவினையின் பயன் அம் மைந்தர் இருவரும் ஏக் காரணத்தாலோ நம்மைவிட்டு நீங்கினுர்கள். அவர்கள் எங்குற்றுர் என்று இதுகாறும் தெரிந்தோமில்லை. சதா அந்தப் புதல்வர்களையே நினைந்து நினைந்து உள்ளம் உருகுகின்றது. குருடனுக்குக் கண் கிடைத்து நீங்கியதுபோலும், மலடிக்கு மகன் பிறந்து மாய்ந்தது போலும் ஆயிற்று. நாம் மக்களைப் பெற்றும் பெருதவர்களாக ஆனேம். இனி வருந்திப் பயனில்லை; இறைவன் திருவருள் நமக்குத் துணைசெய்யும்" என்று மனைவியிடம் கூறி வருந்தினுன்.

அவனுடைய அருமை மனைவி, "பிராணேசா ! எல்லாம் ஈசன் செயல்; அவனன்றி ஓரணுவும் அசையாது. பிரிந்த புதல்வர்கள் ஒருநாள் வந்து சேர்வார்கள். நாம் இப்பிறப்பில் யாதொரு பாவமும் செய்யவில்லை. முன்னைப் பிறப்பில் செய்த வினை மூண்டால் அதனை யாரே விலக்க வல்லார்" என்றுள்.

விந்தைபுரத்து வேந்தனுகிய வீரவர்மனும் அவன் மனைவியும் மகப்பேறு குறித்து பல விரதங்களை அநுட்டித் தனர்; கிணறு வாவிகளை வெட்டினர்; கலை பயிலுங் கழகங்கள் பல அமைத்தனர்; ஏழை மாணவர்கட்கு உணவு விடுதி ஏற்படுத்தினர். பல்வேறு தருமங்களைச் செய்தனர். அதன் பயனுக மன்னன் மனைவி கருக் கொண்டனள். உற்ருரும் மற்ருரும் உவகை எய்தினர். மன்னன் மனம் மகிழ்ந்தான். நல்லதோர் முகூர்த்தத்தில் ஒரு பெண் மகவைப் பெற்றனள். பாற்கடலிற் ருேன்றிய பங்கயவல்லியை யொத்த அப் பாவையைக் கண்டு தாய் களித்தனள். தந்தையும் தமரும் ஆனந்தக்கடலில் ஆழ்ந் தனர். என்ன பெயரிடலாம் என்று ஆலோசிக்கின்ற போது ''பவளேந்திரி'' என்று வைக்குமாறு அசரீரி கூறியது.

பவளேந்திரி இனிது வளர்ந்தனள். கல்வி பயின் றனள். நுண்ணிய அறிவுடைய அவள் இசை நூல்களை யுங் கற்றுணர்ந்தனள். யாழ் முதலிய இசைக்கருவிகளி லும் வல்லவளாக ஆனுள். கடலிற் பிறவா அமுதாக விளங்கினுள். உரிய காலத்தில் மங்கைப்பருவ மடைந் தனள். அவளைக் கண்ட பெண்களுங் காமுறுவர்; எழிற் கொழுந்தென இலகினுள். வீரவர்மன் தன் அருந்தவப் புதல்விக்குத் திருமணஞ் செய்யக் கருதி அரசர்கள் அனை வருக்கும் சுயம்வர ஓலை அனுப்பினுன். தேன் துளித் துள்ள செந்தாமரையை நாடி பற்பல இடங்களிலிருந்து வண்டுகள் வருவதுபோல் பவளேந்திரியை விரும்பிப் பார்த்திபர் பலர், தத்தம் தகுதிக்குத் தக்கவாறு வந்து திரம்பினர்.

* * *

விதர்ப்பதேசத்தை ஆள்பவன் சுந்தரதர்மன் என்பவன் நல்ல கட்டழகும் காளைப்பருவமும் உடையவன். அவன்

சமஸ்தானத்தில் ஒருநாள் இரு வாலிபர்கள் வந்து தொழுதனர்.

சுந்தரதர்மன்: யாரப்பா நீங்கள்? உங்கள் பெயர் யாது?

வாலிபர்: நாங்கள் தங்களிடம் இருந்து வேலைபார்க்கும் பொருட்டு வந்தோம். இளமையிலேயே பெற்றோரைப் பிரிந்துவிட்டோம்; எல்லாக் கலைகளையும் கற்றுணர்ந்தோம். பூகி, மதிபூகி என்பது எங்கள் பெயர்.

சுந்தர தர்மன்: சந்தோஷம். பிரதானிகளாக இருங்கள்.

★ ★ ★

சுந்தரதர்மன் மோகனுள் என்னும் வேசியிடம் நட்பு கொண்டிருந்தனன். தன் மந்திரியையும் அந்த வேசியின் கட்டளையை சிரமேற்றுங்கிச் செய்யவேண்டு மென்றும், அவள் உள்ளம் கோணுமல் யாவரும் நடந்துகொள்ள வேண்டுமென்றும் கட்டளை யிட்டிருந்தனன். மந்திரி, "ஆண்டவனே! என்ன உலகம்? வேசி மோகத்தின் வேகந்தான் என்னே? விபரீத புத்தி; இவர் கட்டளையை விட வேசி கட்டளை தான் சிறந்ததுபோலும்! அவளிடம் போய் அவளுடைய கட்டளையைச் செய்ய எங்களுக்கு என்ன தலையெழுத்து? கடவுளே! இந்த அரசன் ஏன் கல்யாணஞ் செய்துகொண்டு மனைவியோடு வாழக் கூடாது?.........ம்" என்று தனக்குள் கூறி வருந்தினுன்.

சுந்தரதர்மன் ஓர் இரவு மோகனுள் வீட்டிற்குச் சென்றுன். அவள் மன்னவனை வரவேற்று, "வாருங்கள். ஏன் இவ்வளவு நேரம்? உங்களைக் காணவில்லையாளுல் ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு யுகமாகக் கழிகின்றது; என் உயிரே துடிக்கின்றது; தங்கள் திருமுகங் கண்டால் தான் உயிர் குளிர்கின்றது. நான் அடுத்தப் பிறப்பிலே கூட உங்களைத்தான் கணவனுக அடைவேன்" என்றுள்.

சுந்தரதர்மன்: கண்ணே! நான் இராஜாங்க வேலையில் ஈடுபட்டிருந்ததனுல் இங்கே வரச் சற்று தாமதமாகி விட்டது; வருந்தாதே. உன்னைப்போன்ற உத்தமிகள் உலகில் யாருளர்? நானும் இந்த அரசும் என் சிப்பந்திகளும் உனக்கடிமை. உன் உத்தரவுப்படி எல்லாம் நடக்கத் தயார்.

தாதி: அரசரேறே! அம்மா இன்னேரம் நீங்கள் வரவில்லை யென்று அழுதுகொண்டே யிருந்தார்கள். சாப்பிடவேயில்லை. உங்களைப் பார்த்துக்கொண்டிருப்பதுபோல் இருக்க அடையாளம் ஏதாவது கொடுங்கள்.

உடனே மன்னன் விலைமதிக்கமுடியாத வைர மோதிரங்களையும் முத்தாரங்களையும் மோகனுளுக்குத் தந்தான். இங்ஙனம் சுந்தரதர்மன் வேசி வலைப்பட்ட பேயனுனன்.

அரசன் போனவுடன் அந்த ஊர் ரத்ன வியாபாரி மாரப்பசெட்டி அங்கு வந்தான். அவனைக் கண்டவுடன் மோகனுள் ஓடிவந்து கட்டியணைத்து, "வாருங்கள்; இன்னும் ஐந்து நிமிஷம் நீர் வராமலிருந்தால் தோட்டத்திலுள்ள கிணற்றில் விழுந்துவிடத் தீர்மானித்திருந்தேன். நல்லவேளையாக வந்துவிட்டீர். நான் கேட்ட வைர வளையல் கொண்டுவந்தீரா?" என்றுள். செட்டி, "என் காதற்கிளியே! இதோ கொணர்ந்திருக்கின்றேன். என் உயிரைக் கேட்டாலும் தரச் சித்தமாயிருக்கின்றேன்" என்று வைர வளையலைக் கொடுத்தான்.

சிறிது நேரமிருந்து அவன் நீங்கியவுடன், அந்த ஊர் ஜவுளி வியாபாரி மூத்தப்பன் வந்தான். அவனைக் கண்டதும் மோகனுள் ஓடி வந்து தழுவி; "என் கண்ணுளா! ஏன் இத்தனை நேரம்? உம்மைக் காணவில்லையானுல்

என் உயிரே பிரிந்துவிடும்போலிருக்கின்றது. உங்களைப் போன்ற தயாள சித்தமும் தாராளமும் உடைய உத்தம சீலர் இந்த உலகிலேயே கிடையாது; உங்கள் முகத்தில் என்ன அழகு ஒழுகுகின்றது? ஒரு வைர வளையல் விலைக்கு வந்திருக்கின்றது. முப்பதினுயிரமாம். அதைப் போட்டுக்கொண்டு அந்தக் கையால் உங்களைத் தழுவவேண்டும்'' என்ருள். உடனே அந்த அசடன் வீட்டிற்குப் போய் முப்பதினுயிரத்தை மூன்று நிமிஷத்திற்குள் கொண்டு வந்து அவளுக்குக் காணிக்கையாகச் செலுத்தினுன்.

★ ★ ★

ஒருநாள் ஒரு முனிவர் சுந்தரதர்மன் அரசவைக்கு வந்தார். அவரை மன்னன் பணிந்து பாதபூஜை செய்து உபசரித்தான்.

முனிவர் : மன்னர் பெருமானே! உனது நாடு, நகரம் சுகமா?

சுந்தர : சுவாமீ! எல்லாம் சுகம்.

முனிவர் : உனது ராஜாங்கம் சுகமா?

சுந்தர : சுவாமீ! சுகம்.

முனிவர் : அப்பா! உன் மனைவி மக்கள் சுகமா?

சுந்தர : மாதவரே! எனக்கு இன்னும் திருமணம் ஆகவில்லை.

முனிவர், ''ஆஆ...! என்ன இதுஅதிசயம்? இன்னுந் திருமணம் ஆகவில்லையா? மனைவி யில்லாதவன் தருமஞ் செய்யக் கூடத் தகுதி யில்லாதவனுயிற்றே. நெருப்பைக் கூடத் தீண்டக்கூடாதே? உனக்குப் பிறகு இந்த உலகத்தை யார் அரசு புரிவது? குலமும் நலமும்

விளங்க சற்புத்திர பாக்கியத்தை அவசியம் அடைய வேண்டும். ஆதலால் நீ திருமணஞ் செய்துகொண்டு இல்லறமாகிய நல்லறத்தை நடாத்தி வாழ்வாயாக'' என்று கூறி ஆசீர்வதித்து நீங்கினர்.

சில தினங்களுக்குப் பின் பவளேந்திரியினுடைய மணவோலை சுந்தரதர்மனிடமும் வந்தது. மன்னன் அது கண்டு முனிவருடைய சொல்லை நினைத்து, "ஒரு வேளை இந்த மணம் நமக்கு நடந்தாலும் நடக்கட்டும்'' என்று எண்ணி, சர்வாலங்காரத்துடன் அமைச்சரும் சேனையுஞ் சூழ விந்தைபுரம் ஏகினன்.

விந்தைபுரத்தில் சுயம்வரமண்டபம் மிக அழகாக விளங்கிற்று. மன்னர் பலர் சிறந்த இரத்னசனங்களில் வீற்றிருந்தனர். இந்திரசபை போன்ற அதில் வீரவர்மன் ஒருபுறம் பிரமதேவரைப்போல் வீற்றிருந்தனன். சுந்தர தர்மன் உடுக்குலங்களுக்கு நடுவே முழுமதி விளங்கு வதுபோல் திகழ்ந்தனன். வீரவர்மன் கட்டளைப்படி பாங்கிமார்கள் சூழ பவளேந்திரி கையில் மணமாலையேந்தி அமிழ்தத்தால் செய்த திருவுருவம் உயிர் பெற்று வந்தது போல் வந்தனள். அவளைக் கண்டவுடன் சபையோர் இமையா நாட்டம் பெற்றனர். எல்லோருடைய உள்ளங் களும் அவளை நாடி ஏங்கி உருகின. நான்முகக் கடவுள் தனது கைத்திறத்தைப் பரிட்சிக்கும்பொருட்டு முழு வன்மையுடன் முயன்று சிருட்டித்த திருவுருவம்போல் பவளேந்திரி காட்சியளித்தனள். அவளைக் கண்டு கல் லும் புல்லும் உருகினவென்றால் மனிதர் உருகினர் என் பதில் என்ன ஆச்சரியம்?

பவளேந்திரி பிதாவை நோக்கி, "என் அருமைப் பிதாவே! நான் ஒரு வினவை விடுக்கின்றேன். அதற்கு யார் விடைபகர்கின்றார்களோ அவரை நான் மணப்பதாக

உறுதிசெய்துளேன்" என்ருள். வீரவர்மன், "அப்படியே யாகுக" என்ருன். உடனே பவளேந்திரி தன் தோழி யிடம் அதனைத் தெரிவித்தாள். தோழி சபையோரை நோக்கி,

ஒலியின் வகையும் ஒலிக்காரணமும்
ஒலியின் முடிவும் உரை.

"ஒலியின் வகையையும், ஒலி யுண்டாவதற்குரிய காரணமும், ஒலி ஒடுங்கும் முடிவையும் யார் உரைப் பாரோ அவருக்கு எங்கள் அரசி மாலையிடுவாள்" என் ருள். அந்தக்கேட்ட சபையோர் திகைப்புற்று ஒருவரை யொருவர் பார்த்துக்கொண்டே ஊமையரைப் போல் விழித்தனர். ஒரு சிலர் ஏதோ தடுமாறு உளறினர்.

அப்போது சுந்தரதர்மன் எழுந்து, "ஓசை இரண்டு வகைப்படும்; எழுத்தோசை, இசையோசை என்று அறி மின்; எழுத்தோசையாவது, விந்து; வரிகளால் உண்டா வது. இசையோசையாவது, கடலோசை இடியோசை முதலியன. வர்ணுத்மக சத்தம், தொனியாத்மக சத்தம் என வட நூலர் உரைப்பர். இனி ஓசை யுண்டாவதற்கு காரணம் இரண்டு; இரண்டு பொருள் ஒன்ருகக் கூடும் போது ஓசையுண்டாகும். ஒரு பொருள் இரண்டாகப் பிரியும் போது ஓசையுண்டாகும். உதாரணம் ஒரு கை யுடன் ஒரு கையைத் தட்டினுல் ஓசை யுண்டாகின்றது. ஒரு கொம்பை இரண்டாக ஒடித்தால் ஓசையுண்டாகின் றது. ஒரு பெண்ணும் ஆணும் கூடும்போது (கல்யாணம்) ஓசை யுண்டாகின்றது. மீண்டும் பிரியும் போது (மரணம்) ஓசை யுண்டாகின்றது. எல்லா ஓசைகளும் ஆகாயத் தில் போய் ஒடுங்குகின்றன" என்று மிகவும் நுட்பமாக வும் திட்பமாகவும் கூறினுன்.

அதைக் கேட்டு எல்லோரும் "சரி சரி" என்று சிரக் கம்பம் கரக்கம்பம் புரிந்தனர். பவளேந்திரியும் உள்ளம் உவந்து மணமாலையைச் சுந்தரதர்மன் கந்தரத்தில் சூட்டி ஞள். "நன்று நன்று" என்று சிலர் ஆர்த்தனர். ஏமாற் றமும் பொருமையும் அடைந்தனர் சிலர். வீரவர்மன் மகிழ்ந்து மகளைச் சுந்தர தர்மனுக்கு முறைப்படி திரு மணஞ் செய்து கன்னிகாதானஞ் செய்தான். திரும ணம் நிகழ்ந்த பின் சுந்தர தர்மன் பவளேந்திரியுடன் தனது நகரம் வந்து சேர்ந்தான். இரதி தேவியுடன் மன் மதன் உருப்பெற்று வந்ததுபோல் வந்த தம்பதிகளைக் கண்டு அந்நகர மாந்தரும் மந்திரிப் பிரதானியரும் மகிழ்ந்தனர்.

பிறகு அன்றிரவு சுந்தரதர்மன் மோகனுளிடஞ் சென்றனன். அவள் பவளேந்திரியை மன்னன் மணந்த செய்தியைக் கேட்டு தீராத துக்கமும் ஏக்கமும் கொண்டு 'இனி நம் வாழ்வு குலைந்தது.' என்றெண்ணி கண் ணீர் வடித்துத் தரையில் படுத்துப் புரண்டுகொண்டிருந் தனள். சுந்தரதர்மன் திடுக்கிட்டு ஓடி அவளை எடுத்து அணைத்து, "என் காதற் கற்பகமே! உனக்கு என்ன கவலை? உன்னை யாராவது இகழ்ந்தார்களா? இகழ்ந்த வர்களின் தலையை நாய்க்கு இரை யாக்குகின்றேன். கண்ணே! இந்த ராஜ்யமே உன்னுடையது. உன் பவள வாய் திறந்து சொல்லு" என்று கெஞ்சினுன். மோக ஞள் "இனி என் வீட்டின் தலை வாசற்படியை மிதிக்க வேண்டாம்; போங்கள். இத்தனைக் காலமாக நான் தங் களைக் காதலித்தது வீண் தான். இனி நான் இந்த உலகில் இருக்கமாட்டேன். என் உயிர் துடிக்கின்றது" என்று புலம்பினுள். எங்கிருந்தோ கண்ணீர் தாரை தாரையாக ஒழுகிற்று.

சுந்தரதர்மன்: என் அருமைக் கண்ணே! ஏன் இப்படி புலம்புகின்றனை? நீ உயிரை விடவேண்டாம். உன் உயிர் போனால் என் உயிரும் போய்விடும். உனக்கு உற்ற துயரம் யாது?

மோகனுள்: ஆமாம், அதைச் சொல்லி என்ன பயன்? என் தலையெழுத்துப் போலாகட்டும்.

சுந்தர: நான் இதுகாறும் உன் மனதிற்கு மாறாக நடந்த தில்லையே? விஷயத்தைச் சொல், சத்தியமாக உன் இஷ்டத்தைப் பூர்த்தி செய்கிறேன்.

மோகனுள்: தாங்கள் எங்குபோயிருந்து வந்தீர்?

சுந்தர: விந்தைபுரம் போயிருந்தேன்.

மோகனுள்: எதன் பொருட்டு?

சுந்தர: சுயம்வரத்தின் பொருட்டு. பவளேந்திரி என்னும் வனிதை மாலையிட்டனள். திருமணஞ் செய்து கொண்டு வந்தேன்.

மோகனுள்: ஓகோ ! கல்யாணம் பண்ணிக்கொண்டீரா? நான் தங்கள் மீது தணியாத காதல் வைத்திருக்க வேறு ஒரு பெண்ணை நீங்கள் காதலிக்கின்றீரா? இனி இந்த உலகில் எனக்கென்ன வேலை. ஆடவர்களையே நம்பக்கூடாது........ஐயோ ! என் ஆவி பிரிகின்றதே.

சுந்தர: கண்மணி ! நீ வருந்தாதே. ஒரு முனிவர் கல்யாணம் செய்துகொள்ளாமலிருக்கக் கூடாதென்று கூறினர். அதனால் செய்துகொண்டேன். அவளும் நானும் உனது அடிமைகள். நீ எப்படி வேண்டுமாயினும் எங்களை நடத்திக்கொள்.

மோகனுள்: உள்ளபடியா?

சுந்தர: ஆம்; என்மேல் ஆணை.

மோகனாள்: அவளை வந்து என்னைக் கும்பிடச் செய்யுங்கள்.

உடனே சுந்தர தர்மன் மனைவியை யழைத்து அவளை வணங்கச் செய்தான். உலகமாளும் மன்னன் மகளும், மன்னர் மன்னன் மனைவியுமான பவளேந்திரி கேவலம் ஒரு வேசியின் காலில் கணவன் சொற்படி விழுந்து தொழுதாள். தன் கணவன் வேசிவலைப் பட்டவன் என்பதை உணர்ந்து உள்ளம் நொந்தாள். மோகனாள் பவளேந்திரியைக் கண்டு மனம் பதறினாள். "அந்தோ! இவள் பாதத்தில் ஒட்டிய ஒரு தூசுக்கும் நான் நிகராகேன். இவள் கால் நகத்தின் அழகுக்கு என் அழகு ஈடாகாதே. இவளை இவனுடன் வாழவைத்தால் என்னை மன்னன் விரும்பமாட்டான்" என்றெண்ணி, "பிராணேசா! இவள் பேய் பார்வை யுடையவள். பெரிய அகராதி படித்தவள். அழகிய பெண் குடித்தனத்திற்காகாது. இவளை முதலில் சிறையிலடையும்" என்றாள். மதிகெட்ட அந்த மன்னன், அவள் சொல்லுக்கிணங்கி, கற்பரசியாகிய பவளேந்திரியைப் பரிவின்றி ஒரு தனி வீட்டில் இருத்தி, காவலில் வைத்தான். அவளை ஆதரவு காட்டாது உதாசீனப் படுத்தினான்.

பவளேந்திரியைக் காவலில் வைத்தது குறித்து அமைச்சர்களும், பூகி, மதிபூகி என்ற பிரதானியர்களும், மனம் வருந்தினார்கள். மோகனாள் மனம் மகிழ்ந்தாள். மன்னன் அவள் வலைப்பட்டு அவளுடைய கைப்பம்பரம் போல ஆடினான்.

பவளேந்திரி, "ஏ கருணைக்கடலே! கந்தப்பெருமானே! என் கணவன் விலைமகள் வலைப்பட்டு, என்னை இப்படி அநாதரவு செய்கின்றாரே. உலகாளும் மன்னன் அவ்விலை மகளால் ஆளப்படுகின்றாரே? அந்தோ! அவர்

இன்னும் எத்தனைத் துன்பத்தில் ஆழ்த்தினாலும் நான் அனுபவிக்கத் தயார். ஆனால் அவருடைய திருமுகம் பார்க்கும் பாக்கியங்கூட இல்லாமற் போய்விட்டதே. மாலையிட்டதைத் தவிர வேறு ஒருவித வாழ்வும் அறியாத பாவியானேன். 'நிதியுங் கணவனும் நேர்படினுந் தந்தம் விதி யின் பயனே பயன்' என்றது என்னிடம் சரியாகிவிட்டது" என்று கண்கலுழ்ந்தாள்.

தோழிகள், "அம்மா! அழாதீர்கள். ஆண்டவன் உங்களைக் காப்பாற்றுவார்" என்று ஆறுதல் கூறினார்கள்.

இந்த விஷயம் தெரிந்து ஊரார் மறைவில் மன்னனை வைதனர். ஒரு நாள் அரசவையில் சுந்தர தர்மன் கொலு வில் இருந்தான். மந்திரியைப் பார்த்து அரசன், "மந்திரீ! நாடுகள் செழிப்பாக இருக்கின்றனவா?" என்றான்.

மந்திரி: செழிப்பாக இருக்கின்றன.

சுந்தர: குடிகளெல்லாம் நீதிநெறி தவறாமல் நன்னெறி யில் நடக்கின்றார்களா?

மந்திரி: நடக்கின்றார்கள்.

அப்பொழுது யூகி, மதியூகி என்ற இருவரும் நகைத் தனர்.

சுந்தர: ஏன் நீங்கள் இருவரும் நகைத்தீர்கள்?

யூகி: அரசே! கண் எல்லாவற்றையும் பார்க்கும். ஆனால் கண் தன்னைப்பார்த்துக் கொள்ளாது. அது போல் மனிதர்கள் பிறர் குற்றத்தை நோக்குவர். தன் குற்றம் நோக்கிப் பார்ப்பதில்லை.

"ஏதிலார் குற்றம்போல் தன் குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு."

என்பார் திருவள்ளுவர். அதைக்குறித்து எண்ணிச் சிரித்தோம்.

சுந்தர: அதை ஏன் இப்போது எண்ணிச் சிரித்தீர்கள்?

பூகி: தாங்கள், குடிகள் நெறிதவருமல் நடக்கின்ருர் களா என்று கேட்டீர்களே. தங்கள் குற்றம் தங்கட் குத் தெரியவில்லை போலும்.

சுந்தர: என்னிடம் என்ன குற்றம் இருக்கின்றது?

பூகி: அரசே! திருமணஞ் செய்துகொண்ட தருமபத்தினி யைச் சிறையில் வைத்துவிட்டு, காசு கொடுத்த வனைக் கணவனுக நினைக்கும் வேசியின் வலைப்பட்டு அவள் சொல்லை வேதமொழியாகக் கேட்டு, அவளுக் குத் தாசானுதாசனுய் நிற்கின்றீர்.

**வேசியின் வேட்கை யாலேவிளைந்திடும் விளைவைக் கேளாய்**
**மாசிலா மனையாள் வேம்பாம் மன்னிய செல்வ மாயும்**
**காசினி பழிக்கும் நோயுங் கலக்கமுஞ் சாரும் ஞானத்**
**தேசினை யகற்று மாயுள் தேய்ந்திடுந் தேர்தி மன்னே.**

சுந்தர: ஓய்! வேசி என்ருல் எல்லோரும் பொல்லாத வர்களா? மோகனுள் உத்தமகுணம் பொருந்தியவள். அவள் பெருமை உனக்குத் தெரியாது. வாயைமூடும்.

மதிபூகி: அரசே! வேசியரில் நல்லவர்கள். உண்டு; உண்டானுல் அது புலி சைவமாவதுபோல்; ஆனுல் மோகனுளைப்போல் பொல்லாதவர்கள் உலகில் இல்லை. விபரீத புத்தி உமக்கு ஏற்பட்டிருப்பதால் தீயவள் நல்லவளாக உமக்குத் தோன்றுகின்ருள். ஜுரம் வந்தவனுக்கு சர்க்கரை கசக்கும். அதுபோல் கற்புடைய மனைவி உமக்குப் பிடிக்கவில்லை. மோக னுள் உம்மையே காதலிக்கின்ருள் என்று நீர் கருது கின்றீர். உம்மைப்போலவே அவளைப் பலர் கருதி யிருக்கின்ருர்கள். நாங்கள் கூறுவதை எதிர்காலத் தில் தெரிந்துகொள்வீர்.

சுந்தர: ஏய்...... ..என்னிடத்தில் சம்பளம் வாங்கி வயிற்றை வளர்க்கும் அநாதைகளாகிய நீங்கள் எனக்குப் புத்தி சொல்ல வந்தீர்களா? பேஷ் பேஷ். இன்னும் ஒரு நாழிகைக்குள் என் நாட்டின் எல்லையை விட்டு நீங்குமாறு உங்களுக்குக் கட்டளை யிட்டிருக்கின்றேன்.

பூகி: வேந்தே! உன்னைப்போல் நாங்களும் அரச குமாரர்கள் தான். ஏதோ எங்கள் கால கதியால் இங்கு வந்திருந்தோம்.

"கொடுங்கோல் மன்னன் வாழு நாட்டில்
கடும்புலி வாழுங் காடு நன்றே"

என்பதை நாங்கள் உணர்ந்திருக்கின்றோம். இந்தக் கணமே நாங்கள் செல்லுகிறோம். எமது அறவுரையைப் பின்னர் நீ உணர்வாய்' என்று கூறி விட்டு இருவரும் அவனவைக்களத்தினின்றும் நீங்கித் தங்கள் மனம்போனவாறு சென்றனர்.

ஒருநாள் அரசனுடைய அரண்மனைக்குச் சில முனிவர்கள் வந்தனர். அரசன் அவர்களை உபசரித்து உண வருந்த வேண்டினான். அவர்களும் இணங்கினர். முனிவர்கள் இலையில் அமர்ந்தனர். வேலைக்காரர்கள் அன்னம் படைத்தனர். முனிவர்கள், "வேந்தே! நின் மனைவி யெங்கே? அரசமாதேவி யல்லவா நின்னுடனிருந்து விருந்தருந்தச் செய்யவேண்டும். உன் மக்கள் எங்கே? என்றார்கள். மன்னன், 'மகப்பேறில்லை. என் மனைவி இப்போது வருவதற்கின்றி இருக்கின்றாள்' என்றான். முனிவர்கள், 'மனைவியிருந்தும் மனைவியோடு வாழாதவனும் மகப்பேறு இல்லாதவனுமாகிய நின் மனையில் உண்பது பாவம்' என்று எழுந்து சென்றுவிட்டனர். சுந்தரதர்மன் மனம் மிகவும் வருந்தி, பூகி மதிபூகி இடித்

துரைத்ததனாலும், முனிவர்கள் வெறுத்து நீங்கியதனாலும் மனம் சிறிது மாறினான். 'நமது மனைவியிடம் குலம் விளங்கக் குமாரனைப் பெறவேண்டும். மோகனாளுக்குத் தெரியாமல் சாந்தி முகூர்த்தம் வைக்கவேண்டும்' என்று கருதினான்.

சேர்வைக்காரன் என்பவனை யழைத்து, "நீ மாலை போய் அரசி பவளேந்திரியிடம் இன்றிரவு நான் அவளிடம் வருவதாக தெரிவிப்பாய்" என்றான். சேர்வைக்காரன், "சரி" என்று நீங்கினான். அவ்விஷயம் மோகனாளுக்கு எப்படியோ தெரிந்துவிட்டது. உடனே தனது தாதிகள் மூலம் சேர்வைக்காரனை அழைத்தாள். சேர்வைக்காரன் மோகனாள் வீடு சென்றான். அவனைக் கண்டதும் மோகனாள், "வாருங்கள்; உங்கள் மீது எனக்கு நீண்ட நாட்களாகக் காதல்; உங்களைப்போன்ற உத்தமர்களை யடைய, வேண்டுமென்று யார் தான் ஆசைப்பட மாட்டார்கள்" என்றாள். சேர்வைக்காரன் அரசனுடைய காமக்கிழத்தி தன்னை விரும்பியது கண்டு உச்சிவரை குளிர்ந்து உலகத்தையே மறந்துவிட்டான். மோகனாள் அவனை மகிழச் செய்து அணைத்து, "என் காதலரே! அரசன் உங்களிடம் என்ன உத்தரவிட்டார்" என்றாள். சேர்வைக்காரன், "மோகனாள்! பவளேந்திரியிடம் இன்று அரசன் வருவதாகச் சொல்லச் சொன்னார்" என்றான். மோகனாள், "என் ஆருயிரே! நீர் எப்படியாவது அரசரை அங்கு போகவொட்டாமல் தடுத்துவிட்டால் நானும் இந்த உடம்பும் உங்களுக்குச் சொந்தம்" என்றாள். சேர்வைக்காரன், "என் காதலீ! நீ எனக்குச் செய்த எதிர்பாராத உதவிக்கு இதைக்கூடவா நான் செய்யமாட்டேன். எட்டுக் குட்டிக்காணம் போடு என்றாலும் நான் போடத் தயார். நீ கவலைப்படாதே" என்று கூறி நீங்கினான்.

பின்னர் சேர்வைக்காரன் பவளேந்திரி யுள்ள இடத்திற்குப் போய் அவளைக் கண்டவுடன் "இத்துணை அழகுள்ள வனிதையும் உண்டா?" என்று அதிசயித்தான். அவன் மனதில் காமப் பேய் பிடித்தது. பவளேந்திரி, "யாரப்பா நீ, எங்கு வந்தாய்?" என்று கேட்டாள். சேர்வைக்காரன், "அடீ பவளேந்திரி! நீ ஏன் இப்படி இளம்பருவத்தில் தனியே யிருந்து கவலைப்படுகின்ருய்? என் வீட்டில் வந்து என்னுடன் சுகமாக இரு" என்று வாய் கூசாமலும் பழிபாவத்திற்குச் சிறிதும் அஞ்சாமலுங் கூறினான். அது கேட்ட மாதரசியாகிய பவளேந்திரி, இடியைக்கேட்ட நாகம் போல் நடுங்கி, "அடசண்டாளா! துராத்மாவே! என்ன வார்த்தை சொன்னாய்; கற்புடைய மாதர் கனலினும் சிறந்தவரென்பதை நீ யறியாய் போலும், அறிவிலியே! தகாத வார்த்தையைச் சொன்ன உன் வாயைக் கழுகுகள் கொத்தட்டும்; அநாதைப் பிணமாக நீ மாண்டொழிவாயாக" என்று சபித்தாள். அக்கொடியவன் அழிவுகாலம் வந்துவிட்டபடியால் அதற்கும் அஞ்சாதவனாய், "சரி சரி உன்னை நான் ஒருகை பார்க்கிறேன்" என்று கூறிவிட்டு மன்னன்பால் அணுகினான்.

சுந்தரதர்மனைச் சேர்வைக்காரன் தொழுது, "அரசே! அம்மா சொன்னதைச் சொல்ல எனக்கு வாய் கூசுகின்றது; ஆனாலும் தங்கள் முன் சொல்லாமலும் இருக்க முடியவில்லை. தாங்கள் சொன்னதைப் போய் நான் அம்மாவிடங் கூறினேன். "அந்தக் கொடிய சண்டாளனுக்கு இங்கென்ன வேலை? அவன் நாசமாகப் போக! என்று கூறினார்கள்" என்றான். உடனே அரசன் ஆலகால விடம்போல் சீறி, "ஆ! அவளுக்கு அத்தனை அகங்காரமா? என்னை அலட்சியஞ் செய்து பேசிய அவளை இப்பொழுதே அடக்குகிறேன்" என்று வெகுண்டுரைத்து, மந்திரியை யழைத்து, "மந்திரீ! என்னை மதியாது வசை

பேசிய பவளேந்திரியைக் கொண்டுபோய் அயல் தேசத்தில் ஏலம் போட்டு விற்று வருகின்ற பணத்தை என் காதலி மோகனுளிடம் சேர்த்துவிடு'' என்று கட்டளையிட்டான். மந்திரி, ''மன்னரேறே ! 'பதருக் காரியம் சிதருது' என்பது பழமொழி. ''ஆய்ந்தோய்ந்து பாராதவன் தான் சாகக்கடவன்'' என்பர் பெரியோர். ஆதலினுல் அவசரப்பட்டு தீர்மானிக்கவேண்டாம். எங்கள் தாய் அரசமாதேவியார் சிறந்த கற்புடையவர்கள்; இங்ஙனங் கூறியிருக்கமாட்டார்கள். இதில் ஏதோ சூழ்ச்சி யிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது'' என்ருன். கோபத்தினுல் வெதும்பி யிருக்கின்ற கொற்றவனுக்கு அமைச்சனுடைய அறவுரை ஏறவில்லை; ஆராய்ச்சியும் நிதானமும் உண்டாகவில்லை. சினந் தன்னையே கொல்லுமல்லவா? ''மந்திரீ! எனக்கு நீ இதோபதேசம் செய்ய வேண்டா. பெண்களுடைய இந்திரஜாலம் உனக்குத் தெரியாது. பசும்புல்லால் மூடப்பட்ட பாழுங்கிணறு போலிருப்பார்கள். ''அள்ளாது குறையாது சொல்லாது பிறவாது'' என்ற பழமொழியை நீ அறிந்திலை போலும்; சேர்வைக்காரன் அபாண்டமாக அவள் சொல்லாத சொல்லைச் சொல்லுதற்கு என்ன காரணம் உளது? அதனுல் அவனுக்குவரும் பயன் தான் என்னை? ஆதலால் தடுத்துப் பேசாமல் நான் சொன்ன காரியத்தைச் செய்'' என்று கடிந்துரைத்தான். ஒருவேளை மந்திரி அங்ஙனஞ் செய்யாதொழிவனே என்ற சந்தேகத்தால் அவனுடன் சேர்வைக்காரனையும் அனுப்பினுன்.

அமைச்சன் மிக்க வருத்தமுற்றவனுகி அரசனுணை கடக்க மாட்டாமல் துன்பக்கடலில் முழுகியிருந்த பவளேந்திரியிடம் எய்தி வணங்கி, ''அம்மா ! தங்களை ஏலம் போட்டு விற்க அரசனுடைய ஆணை; புறப்படுங்கள்'' என்று கண்ணீர் ததும்பிக் கழறினுன். கரைகாணுக்

கடலில் விழுந்த ஒருவனை முதலையும் பற்றினுல் எப்படியோ அப்படி பவளேந்திரி ஆற்ருெணுத துன்ப மெய்தினுள். "ஐயா! நீதி யில்லையா? நெறி யில்லையா? இந்த வூரில் பெண்ணேடு பிறந்தவர் இல்லையா? அந்தோ! நான் அணுவளவும் தவறு செய்யவில்லையே. குற்றமே புரிந்தேனெனினும் என்னைக் கொலைபுரியலாமே? என் உயிர் பிரிந்தால் இந்தத் துன்பமும் பிரியுமே? முருகா! மூவர் முதல்வா! என்ன பாவஞ் செய்தேனே? இப்படியும் என்னைச் சோதிக்கலாமா? கணவன் உத்தரவுப்படி நடப்பதே தருமம்; இன்னும் எதுவரினும் வருக; எதுபோகினும் போக. எல்லாம் எம்பெருமானுடைய திருவருள்" என்று கல்லுங் கரையப் புலம்பிப் புறப்பட்டாள். அந்தத் துயரைப் பார்த்து மந்திரி பொறுக்கமுடியாத துன்பமுற்ருன். ஆனுல் சேர்வைக்காரன் மட்டுஞ் சிரித்தவண்ணமாக உடன் சென்ருன். இதனை யறிந்த வஞ்சகி மோகனுள் புதையல் கிடைத்ததுபோல் மகிழ்ச்சியினுல் பொங்கினுள். அந்நகர மாந்தரெல்லாம் அழுது "அம்மா பவளேந்திரித் தாயே! உன் கற்புக்கு ஒருபோதும் பங்கம் வராது. தெய்வம் உன்னைக் காப்பாற்றும். அந்தோ! இந்த அரசன் வேசி வலைப்பட்டு உத்தம பத்தினியை ஏலம்போடச் சொன்னுனே? தெய்வமே! நாங்கள் என்ன செய்வோம்" என்று கண்கலுழ்ந்து வருந்தியும் வாழ்த்தியும் நின்ருர்கள்.

நெடுந் தொலைக் கப்பால் குந்தல தேசம் போய் கடைவீதியில் பதிவிரதா சிகாமணியாகிய பவளேந்திரியை நிறுத்தி பறையறைவித்து விலை கூறினுர்கள். கண்ணீர் ஆருய்ப் பெருக ஓவியம்போல் நிலம்பார்த்து பவளேந்திரி நின்ருள். கூட்டங் கூடியது. ஜனங்கள் பவளேந்திரியைக் கண்டு "இந்த உத்தமியை ஏலம் போடுவதற்கு என்ன காரணமோ? எப்படித்தான் மனந் துணிந்ததோ? இத்தாயை யாரப்பா வாங்குவான்? நெருப்பைக் கொண்டு

போய்க் கூரையில் வைத்தது போலாகும்'' என்று பற்பல பேசினார்கள். சேர்வைக்காரன் பவளேந்திரியைத் தானே வாங்கிவிடவேண்டும் என்று சதியாலோசனை செய்தான். சிறிது பணமுங் கொணர்ந்து தயாராக வைத்திருந்தான். பவளேந்திரியை விலைகொடுத்து வாங்க எல்லோருந் தயங்கி நின்றார்கள். அதுகண்டு சேர்வைக்காரனுக்குப் பரம சந்தோஷம். 'பவளேந்திரி இனி நமது சொத்து' என்று கருதித் தலைகால் தெரியாமல் நின்றான்.

★ ★ ★

பத்மசேகரன் என்ற அரசனுடைய அருந்தவப் புதல் வன் உத்தமசீலன் பிதாவிடம் மனவருத்தமுற்று வெளிப் பட்டு வேறு தேசம் போய் தனபாலன் என்ற இரத்தின வியாபாரிடம் இருந்து அவனுக்கு உறுதுணையாக விளங்கினான். தனபால செட்டி நூறுயிரம் பொன்னை உத்தமசீலனிடங் கொடுத்து குந்தல தேசம் போய் மிக வுஞ் சிறந்த இரத்தினங்களை விலைக்கு வாங்கிவருமாறு அனுப்பினான். உத்தமசீலன் நல்ல இளமையும் எழிலும் இனிய நடையும் உடையவன். நூறுயிரம் பொன்னுடன் குந்தலதேசம் வந்து கடை வீதியிற் சென்றுகொண்டிருந் தவன் இந்தக் கூட்டத்தை கண்டு எட்டிப் பார்த்தான். பவளேந்திரி இலச்குமி தேவிபோல் நிற்பதையும், ஒருவன் ''திடும் திடும்'' என்று பறை கொட்டுவதையும், மந்திரி யும் சேர்வைக்காரனும் நின்று விலை கூறுவதையுங் கண் டான். கனவோ என்று கருதினான். அதிசயமுற்றான். ''என்னே மடமை? இந்தப் பெண்ணரசி விண்ணரசியோ? மண்ணரசியோ? அமிர்தத்துடன் பிறந்த அணங்கு போன்ற அழகின் கொழுந்தை ஏலம் 'போடுவானேன்? பெண்ணை விற்பது என்பதை எங்கும் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை. விசாரிப்போம்'' என்று சேர்வைக்கா ரனைப் பார்த்து, விசாரிக்கலானான்:

உத்தம: ஐயா! இந்த மாதரசி யார்? இவரை ஏன் விலை கூறுகின்றீர்?

சேர்வை: ஓய்! போ. ஆண்டிக்கென்ன அம்பாரத்தின் மதிப்பு? வீதியோடு போகின்ற வெட்டிப்பயலாகிய உனக்கென்ன இந்தக் கவலை? போடா போ.

உத்தம: (அரசபுத்திரனுதலால் அவன் கூறிய கடுஞ் சொல் பொறுக்கமாட்டாமல் மிதிக்கப்பட்ட நல்ல நாகம்போல் சீறி மந்திரியைப் பார்த்து), "ஐயா! யாரையா இவன்? நாயைப்போல் விழுகின்ருன். இந்த மங்கையர் திலகம் யார்? ஏன் இவர் விற்கப் படுகின்ருர்? என்று கேட்டான்.

மந்திரி: ஐயா! இந்தத் தாய் விந்தைபுரத்தரசராகிய வீர வர்மர் புதல்வி; விதர்ப்பதேசத்தரசர் சுந்தர தர்மரு டைய தருமபத்தினி. இந்த சேர்வைக்காரன் செய்த வஞ்சகத்தால் அரசன் மனம் மாறி இவ் வனிதா ரத்தினத்தை விற்கச்சொல்லி கட்டளையிட்டார். இந்தப் பாவி, தானே வாங்கி, சுடுகின்ற நெய்யை நாயருந்த நினைப்பதுபோல் இவரை யடைய நினைக் கின்ருன். அதிக விலை தருபவருக்கு இவரை விற்பதாகத் தீர்மானம்.

உத்தம: ஆகா! என்ன விபரீதம்? குணபூஷணியாகிய இந்த அம்மையை விற்கச்சொன்ன வேந்தன் தலையில் என்னதான் இருக்கின்றதோ? இந்த சேர்வைக்கார னுக்குத்தான் என்ன செருக்கு? என்னை இன்ன னென்றறியாமல் 'வீதியோடுபோகின்ற வெட்டிப் பயல்' என்ருன். இவன் எண்ணத்தில் மண்ணைப் போடுகின்றேன்; இம் மாதரசியை நானே வாங்கி விடுகிறேன்.' என்று எண்ணி, "ஐயா விலை கூறும்" என்ருன்.

மந்திரி: பதினுயிரம் பொன்.

சேர்வை: பதினேராயிரம்.

உத்தம: இருபதினுயிரம்.

சேர்வை, திகைத்து, 'இது என்ன இவன் இப்படி ஏற்றி ஏலங் கேட்கின்ருன்? பேர்வழி கையில் பணமிருக்கின்றதுபோலும்' என்று எண்ணி, "இருபத்தைந்தாயிரம்" என்ருன்.

உத்தம: நாற்பதினுயிரம்.

சேர்வைக்காரன், 'நம்மிடம் இருபதினுயிரந்தான் இருக்கின்றது. கொஞ்சம் கடன் வாங்கியாவது வாங்கலாமென்று பார்த்தோம். இவன் சனிபோல வந்து சேர்ந்தான். நான்கைந்து பேரிடம் கடன் வாங்கியாவது இவளை வாங்கிவிட்டால் பிறகு இவளைக் கொண்டே ஒரு வருஷத்தில் கோடி பொன் சம்பாதித்துவிடலாம்" என்று எண்ணி, "நாற்பத்தையாயிரம்" என்ருன்.

உத்தம: ஐம்பதினுயிரம், ம்......ம் .....

சேர்வை: ஐம்பத்தோராயிரம்.

உத்தம: நூருயிரம் ! (என்று ஓங்கி உரைத்தான்.)

சேர்வைக்காரன் தலையில் இடிவிழுந்தது போலிருந்தது. ஆமை போல பதுங்கி ஊமைபோல நின்ருன். நின்றவனுக்கு மனம் ஏதோ பறிகொடுத்து விட்டதுபோல் பதறியது. "மந்திரியாரே ! இவனிடம் பணமிருக்கின்றதா என்று பாருங்கள். ரொக்கமாகக் கொடுக்கச் சொல்லுங்கள். பார்த்தால் பனைதைபோல் தோன்றுகின்றது" என்ருன்.

உத்தமசீலன் "அடே அறிவற்ற அசடே! என்னைப் பனைதை யென்ற நாவை அறுத்து நாய்க்குப் போடுவேன். நீ

எனக்கு ஒரு துரும்பு. சிங்கம் எறும்பை எதிர்க்காது. ஆதலால் உன்னை மன்னித்தேன். உனது பாவமான செய்கைக்கு ஏற்ற தண்டனையை விரைவில் உனக்கு இறைவன் விதிப்பான்'' என்று கடிந்துரைத் தான்.

சேர்வை: 'பார்ப்போம் ஒரு கை. சாமியாவது சாத் தானுவது; பாவமாவது புண்ணியமாவது. உன்னை நான் கவனித்துக் கொள்கிறேன்' என்று முணுமுணு துக் கொண்டான்.

பின்னர் உத்தமசீலன் நூருயிரத்தையும் எண்ணித் தந்தான். மந்திரி பவளேந்திரியை ஒப்புவித்துவிட்டு ''ஐயா! இனி இந்த அம்மை உம்முடைய சொத்து'' என் றுரைத்துவிட்டுப் பவளேந்திரியைப் பார்த்து, ''அம்மா! உங்கள் திருவடிக்குக் கோடி வந்தனம். நான் எத்த னையோ நீதிகளை எடுத்துக் கூறியும் பார்த்திபன் பாவியின் சூழ்ச்சியால் கேட்கவில்லை. மதியினராயினும் மன்ன ராயினும் முதிர்ந்தவராயினும் முனிவராயினும் விதியினை யாவரே வெல்ல வல்லவர்? ஆனுல் இவர் நற்குண முடையவராகக் காணப்படுகின்றுர். கடவுள் உங்களைக் காப்பாற்றுவார். நான் போய் வருகிறேன்'' என்று கூறி பணத்தைக் கொண்டுபோய் மோகனுளிடம் சேர்த்தான். பவளேந்திரியை ஏலம்போட்டு விற்ற செய்தியைக் கேட்டுக் களிப்புற்றுள். சேர்வைக்காரன் தனக்கு ஒரு அவசர காரியமிருப்பதாக மந்திரியிடம் கூறி குந்தலதேசத் திலேயே பிரிந்து, உத்தம சீலனுக்குத் தெரியாமல் அவ னைப் பின் தொடர்ந்தான்.

உத்தமசீலன் குணவதியாகிய பவளேந்திரியை ஒரு சத்திரத்திற்கு அழைத்தகினுன். இவன் நம்மை யென் செய்வானே? என்று அம்மை அஞ்சிய உள்ளத்துடன் கண்ணீரால் பூமியை நனைத்துக் கொண்டே சென்று

சேர்ந்தாள். உத்தம சீலன் அவளை இருத்தி எட்டங்கமும் நிலத்தில் தோய வீழ்ந்து வணங்கி, "என்னை யீன்ற அன்னையே! தாங்கள் அழவேண்டாம்; அஞ்சவும் வேண்டாம்; அடியேன் தங்களை மாறான எண்ணத்துடன் ஏலம் எடுக்க வில்லை. அந்தப் பாவி சேர்வைக்காரன் எடுத்து உம்மைத் துன்புறுத்தாதிருக்கும் பொருட்டே எடுத்தேன். தாங்கள் எனக்குத் தாய்; நான் உமக்குச் சேய். நான் உமக்குப் பாத பூஜை செய்து பதம் பெறுவேன்" என்று மனம் கரைந்து உரைத்தான்.

பவளேந்திரி: அப்பா! உனக்கு சுகம் உண்டாவதாக. உன் வணக்கமும் ஒழுக்கமும் உன்னை யுயர்த்துமாக. உன்னைப் போன்ற உத்தமர்களை யான் இதுகாறுங் கண்டதில்லை. கரை காணுக் கவலைக் கடலில் விழுந்து தத்தளித்த எனக்குத் தெப்பங் கிடைத்தது போல் நீ கிடைத்தனை. என்னமோ என்மனம் சிறிது ஆறுதலடைகின்றது. நீ என்னை என்ன செய்வாயோ என்று பதறினேன். அன்னையே என்று என்னை நீ அழைத்த இன்னுரை அமிர்தம் போல் என் உயிரையும் உணர்வையும் உள்ளத்தையும் செவியையுங் குளிர்வித்தது. அப்பா! நீ யார்? உனக்கு இத்தனைச் செல்வம் ஏது? தயை செய்து சொல்லலாமா?

உத்தமசீலன்: அன்னையே! பாஞ்சால நாடாளும் பத்மசேகர மகாராஜருடைய பாலன் அடியேன். சிறு பருவத்தில் பிதாவிடம் மனவருத்தமுற்று வந்து விட்டேன். தனபாலன் என்ற இரத்தின வியாபாரியிடம் அவருடைய ஆள் போல் இருந்து வருகின்றேன். இரத்தினம் வாங்க நூருயிரம் பொன் செட்டி என்னிடம் தந்தனுப்ப நான் இங்கு வந்தேன். சேர்வைக்காரன் தங்களைச் சதி செய்து விலைக்கு வாங்கக் கருதியதைத்

தெரிந்து, உங்களை நான் பணங்கொடுத்து வாங்கினேன். என் பெயர் உத்தம சீலன்.

பவளேந்திரி: மகனே! உன் பெயருக்கு ஏற்ற உத்தம குணங்கள் உன்னிடம் பள்ளத்தில் நீர் தங்குவது போல் தங்கி யிருக்கின்றன. உன்னுடைய உயர் குணத்தை நான் உன்னுந்தோறும் உள்ளம் உருகுகின்றது. நீ நீடூழி வாழ்க.

உத்தம: அன்னையே! எல்லாந் தங்கள் ஆசீர்வாதத்தின் பெருமைதான். நான் இன்னுந் திருமணமாகாதவன். பிரமசாரி. என் உயிருள்ளவரை உங்கள் திருவடியை வழிபட்டு வாழ்வேன். தாங்கள் பிறன்மனைவி யென்றவுடன் தங்களைத் தாயென்று நான் எண்ணியதில் என்ன வியப்பிருக்கின்றது? பிறன் மனைவியைத் தாயாக எண்ணுவது மனிதனுடைய முதற்கடமை தானே. உயர் குலத்தில் பிறந்த எவன் தான் பிறன் மனைவியை விரும்புவான்? பாவங்களுக்கெல்லாம் பெரும் பாவம் பரதாரகமனமே. பிறன் தாரம் நச்சுவார்க்கு எண்ணில்கோடி நரகம் கிடைக்குமே. என் தாயே! பரதார வேட்கையால் இராவணன் குலத்தோடு அழிந்த கதை உலகறிந்ததல்லவா. உயிரினுஞ் சிறந்தது ஒழுக்கமல்லவா. உத்தமக் குடியிற் பிறந்தவன் மனம் பிறன் மனைவியிடம் மறந்துஞ் செல்லாது. உங்கள் பாத ஊழியனாக நான் இருப்பேன். தாங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம்.

பவளேந்திரி: அப்பா குழந்தாய்! உன் அறவசனங்கள் அமிர்தத்தினும் இனிமையாக இருக்கின்றன. உன்னைப் போல் ஒவ்வொரு ஆண்மகனும் இருப்பானாயின் உலகம் எவ்வளவு புனிதமாய் இருக்கும். நரகக் குழி தூர்ந்தொழியுமே. இந்த நற்குணம் எல்லா ஆடவர்க்கும் அமைய வேண்டும். பிறன்மனை நோக்

காத பேராண்மையல்லவா ஆடவர்க்கு அணிகலம். காமமும் கோபமும் மோகமும் நிறைந்த இந்தப் பாழும் உலகில் உன்னைப் போன்ற உத்தமர்கள் ஒன்றிரண்டு பேர் இருப்பதனால் தான் மதியுங் கதிரும் உதிக்கின்றன. வானம் பொழிகின்றது. நிலம் விளைகின்றது. உன் பெயரும் புகழும் பொன்றாது நின்று நிலவுக.

உத்தம: அன்னையே! மங்கையர் திலகமாகிய தங்களை ஏலம் போடச்சொன்ன அரசனுடைய அறிவையும் அநீதியையும் என்னவென்று சொல்வது? பத்தினியை விற்ற பாவியை நான் இதுகாறும் பார்த்ததில்லை.

பவளேந்திரி: மகனே! இன்னொரு விசை அப்படிச் சொல்லாதே. புல்லென்றாலும் புருடன், கல்லென்றாலும் கணவன், ஆயிரம் அநீதி செய்தாலும் கற்புடைய மாதர் கணவனை வெறுக்கக் கூடாது. இந்த உடம்பும் உயிரும் அவருடைய உடைமை. அவருடைய உடைமையை அவர் எப்படியுஞ் செய்யலாம். அது பற்றி அவரை இழிவுபடுத்தக் கூடாது. தவிர பேய் பிடித்தார் செயலெல்லாம் பேயின் செயல்போல் வேசி மயக்கத்தில் வீழ்ந்த அவர் செயல், அம் மயக்கின் செயலே. அடித்தாலும் சேய் தாயை அடுப்பது போல், ஒறுத்தாலும் கணவனை மகளிர் அடுத்து வாழவேண்டும். அது தான் கற்பு நெறி. நான் கற்பு நெறியினின்றும் சிறிதும் வழுவாதது உண்மையாயின் அவர் திருந்துவதோடு என்னையும் பொருந்துவர். என் விதியையே நோகவேண்டும்; அவரை நோவதாற் பயன் என்ன?

உத்தம: தாயே! என்னை மன்னியுங்கள். தங்கள் ஒப்பற்ற கற்பின் பொற்பைக் கண்டேன். ஏலம் போடு

வித்த கணவனையும் தாங்கள் வெறுக்காது விதியை வெறுக்கின்றீர். தங்களைப்போன்ற கற்புடைய மங்கையராலேயே உலகம் நிலை பெறுகின்றது. அருந்ததியும் தங்கள் கற்பைக் கண்டு நாணுவாள். இனி நாம் எங்காவது போய் தங்கிக் காலம் கழிப்போம்.

பவளேந்திரி: அப்பா! தனபால செட்டி உன்னிடம் கொடுத்த நூருயிரம் பொன்னைத் திருப்பிக் கொடுக்க வேண்டாமா? இந்தா; இந்த மோதிரம் என் பிதா எனக்குப் போட்டது. இது கோடிப் பொன் விலை பெறும்; இந்த நகரை ஆளும் மன்னனிடம் விற்றுக் கொண்டுவா. நூருயிரம் பொன்னைத் தனபாலனிடந் தந்துவிட்டு மிகுதியை வைத்துக் காலந் தள்ளலாம். நான் என் கணவன் என்னிடம் வருமாறு பத்து மாதந் தவஞ் செய்வேன். அதற்குள் வாராதொழிந்தால் உயிர் விடுவேன். இது எனது உறுதி.

உத்தமசீலன் அந்த விலைமதிக்க முடியாத மோதிரத்தைப் பெற்றுக்கொண்டு, "அம்மா! தங்களைத் தனியே விட்டுப்போக அஞ்சுகின்றேன். ஆயினும் அவசியம் போகவேண்டியுளது. நான் வருமளவும் இங்கு ஜாக்கிரதையாக இருங்கள்; விரைவில் வந்துவிடுகின்றேன்" என்று கூறிவிட்டு மன்னனிடம் செல்வானுயினுன். இவற்றையெல்லாம் ஒளிந்து கவனித்துக்கொண்டிருந்த கொடும்பாவி சேர்வைக்காரன் வேகமாக ஓடி அந் நகரையாளும் குந்தல ராஜனைப் பணிந்து, "வேந்தர் வேந்தே! நான் விதர்ப்ப நாடாளும் சுந்தரதர்மருடைய அந்தரங்க சேவகன். மலர்மிசை வாழும் மகாலட்சுமியும் நாணும் வனப்புடைய ஒரு மாதை, ஒரு வர்த்தகன் வஞ்சனையாகக் கொணர்ந்து இந்த ஊர் சத்திரத்தில் வைத்திருக்கின்ருன். அவளுடைய அழகு யாராலும் அளக்க முடியாதது. அவ

ளுக்கு ஏற்ற ஜோடி தாங்களே. இப்போது தங்களிடம் விலைப்படுத்த ஒரு மோதிரங் கொணர்கின்றான். தாங்கள் அதைப் பெற்றுக்கொண்டு, 'இதைக் களவாடி வந்தனை' என்று அதட்டி 'இதற்குரியவரைக் கொணர்வாய்' என்று கூறி அவனைத் தாமதிக்கச் செய்து, அதற்குள் சேவகரை யுந் தாதியரையும் அனுப்பி சத்திரத்திலுள்ள கட்டழகி யைக் காவல்படுத்திவிடும். அவன் போய் அவளைத் தேடிக் காணாது அப்படியே போய்விடுவான். பிறகு தாங்கள் அம் மடமங்கையுடன் இன்புற்று வாழலாம். அப்படி வாழும்போது அடியேனையும் உபகரிக்க வேண்டும்" என்று கூறினான்.

குந்தலராஜன் ஒரு காமாந்தகன் ஆனதால் அவன் வார்த்தையை வேதாகம வார்த்தையாகச் சென்னிமேற் கொண்டு "அப்படியே" என்று கூறியிருந்தான். உத்தம சீலன் வந்து மன்னனைப் பணிந்து, "வேந்தரேறே! இந்த மோதிரத்தை விலைப்படுத்த வந்தேன்; பார்த்து விலை மதித்து வாங்கிக்கொள்ளும்" என்று நீட்டினான். குந்தல ராஜன் அதைப்பெற்று, "ஐயா! இப்படியிரும். விலை மதித்து மதிப்புப்படி பணந் தருகின்றேன்" என்று கூறி அவனை ஒருபுறத்தில் இருக்கவைத்து, முரட்டுச்சேவகரை யனுப்பி பவளேந்திரியைத் தனது சிங்கார மாளிகையில் தாதியர் சூழ இருத்துமாறு ஏற்பாடு செய்தான். அந்த முரட்டுச் சேவகர் பவளேந்திரி யிருக்குமிடமணுகி, "ஆரடி திருடீ! இப்படி எழுந்துவா; அகப்பட்டுக் கொண்டாயா? உன்னைத்தான் நீண்டநாட்களாகத் தேடிக்கொண்டிருந் தோம்" என்று அதட்டி அம் மாதரசியைக் கூட்டிக் கொண்டுபோய் தாதியர் நடுவில் காவல்படுத்தினர்.

பவளேந்திரி, "அறுமுகத் தரசே! ஐயனே! இது என்ன விபரீதம்? மோதிரத்தைக் கொண்டுபோன என் மகன்போன்ற உத்தமசீலனைக் காணோமே? எனக்குக்

கிடைத்த தெப்பமும் உடைந்து மீண்டும் கவலைக் கடலில் அழுந்தினேனே. ஆண்டவனே! என்னை இப்படியும் சோதிக்கலாமா? நான் பிறந்தது முதல் யாருக்கும் மனத்தாலும் தீங்கு செய்ததில்லையே. பண்டைப் பிறப்பில் செய்த பாவம் மூண்டு என்னை வாதிக்கின்றதே. பெண்ணென்றால் பேயு மிரங்குமே. ஏ கருணாநிதி! என்னைக் காப்பாற்றுவீர். அந்தோ! இன்னும் என்னென்ன ஆபத்து வருமோ. என் உயிர் போய்விட்டாலும் நன்றாக இருக்குமே. பெண்ணாய்ப் பிறப்பது பாவங்களுக் கெல்லாம் பெரிய பாவம்.

பண்ணார் மறைபோற்றும் பன்னிருகண் மாமணியே
தண்ணார் தணிகை தனில் வாழுந் தாயகமே
பெண்ணாய்ப் பிறந்து பெருந்துயருற் றேன்கருணைக்
கண்ணா கவலைக் கரைசேர்த்துக் காத்தருள்வாய்''

என்று எம்பெருமானை ஏத்திக்கொண்டிருந்தாள்.

பவளேந்திரியைக் காவல்படுத்திய தகவலை அறிந்த குந்தல மன்னன், உத்தமசீலனை அழைத்து, "ஐயா! இந்த மோதிரம் மிக உயர்ந்த ரத்தினங்களால் அமைந்துளது. இந்த மோதிரத்திற்கும் உனக்கும் மதிப்பு ஏற்படவில்லை. தவிர இதில் பவளேந்திரி என்று எழுதியுள்ளது. நீ இதைக் களவாடிக் கொண்டுவந்திருக்க வேண்டுமென்று கருதுகின்றேன்'' என்றான். உத்தமசீலன், "வேந்தே! இது என் தாய் பவளேந்திரி யம்மையாருடையது'' என்றான். மன்னன், "அதை நான் எப்படி நம்புவது? அவளை யழைத்துவந்து அவள் சொன்னால் ஒப்புக்கொள்வேன்; இல்லையேல் நீ களவு செய்தாய் என்பதில் சந்தேகமில்லை. தண்டிக்கப்படுவாய்'' என்றான். உத்தமசீலன், "அரசே! என் தாயை இதோ அழைத்து வருகிறேன்'' என்று புறப்பட்டுப் போனான். வழியில் சேர்வைக்காரன் எதிர்த்து,

"அநாதைப் பயலே! உன்னை இலேசில் விடுவதில்லை. என் ஆயுள் உள்ளவரை ஒருகை பார்ப்பேன்" என்ருன்.

உத்தமசிலன் தன் தாய்க்கு ஏ தா வ து ஆபத்து நேர்ந்ததோ என்று ஏங்கி ஓடி சத்திரத்தில் பார்த்தான். அங்கிருந்த அம்மையைக் காணுது புதைத்திருந்த புதையலைப் பறி கொடுத்த வறிஞனைப் போல் வருந்தினுன். அம்மா! அம்மா! என்று நாலாபக்கங்களிலும் கூவி யழைத்து ஓடினுன்; தேடினுன்; மனம் வாடினுன். பூமியில் விழுந்து அழுதான். "என் தாயே! தாங்கள்எங்கு சென்றீர்? யார் உம்மை வஞ்சித்தனரோ? அந்தோ! நடந்தது இன்னதென்று அறியேனே; என்ன செய்வேன். ஜெகதீசா! தனபால செட்டியிடம் போனுல் பணங் கேட்பான்; அரசனிடம் போனுல் கள்வனென்று தண்டிப்பான். என் தாயையு மிழந்து பணத்தையு மிழந்து மோதிரத்தையு மிழந்து பரதவிக்கின்றேனே. பாவிக்கு இனி உய்வில்லை' என்று எண்ணிப் பேய்போல் அலைந்து நாடும் நகரமும் காடும் மலையுமாக பவளேந்திரியைத் தேடுவானுயினுன்.

குந்தல மன்னன் அன்று சர்வாபரண அலங்கிருதனுகப் புறப்பட்டு தன்னைப் பாக்கியசாலியாக எண்ணி உடம்புடன் சுவர்க்கலோகம் புகுபவனைப்போல் தனது சிங்கார மாளிகையை யடைந்தான். அவனைக் கண்டவுடன் தாதியர் பவளேந்திரியைப் பார்த்து, "அம்மா! இதோ எங்கள் அரசர் வருகின்ருர்" என்று கூறினர். பவளேந்திரி தனக்குள், 'இவன் தான் நம்மை இங்ஙனம் அல்லல்படுத்தினுன் போலும்? நமக்கு உறுதுணையாக வந்த நமது மகன் போன்ற உத்தமசிலனைப் பாவி இவன் என் செய்தானே? கொன்றுவிட்டானே? அப்பா உத்தமசிலா! என்னுல் உனக்கும் தீங்கு நேரிட்டது. ஐயோ பாவம்! நற்குணமுள்ள உனக்குச் சமானமாக நானிலத்தில் யாரைக் கூறுவேன். உனக்கு இப் பேரிடர் வந்ததே!

துன்பம் என்னோடு முடியக்கூடாதா? இனி நாம் இந்தப் புலியிடத்திலிருந்து எப்படித் தப்பிப்பது? இவனைக் கண்டால் துராத்மாவாகக் காணப்படுகிறதே? காமவெறியால் கண்மூடி வருகின்ற இவன் மண்மூடிப்போக. இந்திராதி இமையவர் இடர் கெடுத்த கந்தநாயகா! உன் ஆறெழுத்தைத் தவிர வேறெழுத்தறியாத என்னை இந்த வேளை காப்பாற்று. இப்போது தந்திரமாகப் பேசியே இவனை ஏமாற்றவேண்டும்' என்று எண்ணி, எழுந்து ஒருபுறம் மலர்ந்து காற்றால் அசைகின்ற பூங்கொம்பு போல் நின்றாள்.

குந்தலமன்னன் அவளுடைய அழகிய தோற்றத்தையும் ஏற்றத்தையுங் கண்டு காமத்தீயினால் கருகினான். தனக்கு ஏதோ ஒரு பெரிய அதிர்ஷ்டம் கிடைத்திருப்பதாக எண்ணி உடல் பூரித்தான். விரைந்து பவளேந்திரியிடம் வந்தான். ஒரு பெரிய புலி நெருங்கி வரும்போது அஞ்சி நிற்கும் பெண் இளமான்போல் உடலும், உயிரும், உள்ளமும் நடுங்க பவளேந்திரி ஒடுங்கி, முருகா! முருகா! என்று உள்ளத்தில் உரைத்துக்கொண்டு நின்றனள். அவள் இருதயம் வெடித்துவிடும்போல் துடித்தது.

குந்தலன்: என் காதற்களஞ்சியமே! ஏன் இப்படி கலங்கி நிற்கின்றாய்? இனி உனக்கு என்னகுறை? நீ முன்னைப் பிறப்பில் செய்த முடிவில்லாத புண்ணியப் பயனால் என்னை யடைந்தனை. இனி என் உயிர், என் அரசு, என் செங்கோல், என் வாழ்வு எல்லாம் உன்னுடையதே. என் மனைவியரும் ஆயிரக்கணக்கான தோழியரும் உன் காலடியில் கிடந்து பணி செய்யச் செய்கிறேன். உன் உதடு அசைந்தால் உலகம் அசையச்செய்கின்றேன். இனி நான் அரசு புரியமாட்டேன். உன்னை அரசியாக்கி நீ அரசாள நான் உனக்குப் பணியாளனாக இருப்பேன். நீ விண்மடந்தையா? மண்மடந்தை

தானு? பெண்மடந்தையரில் உன்னை யொப்பாரை நான் காவியத்திலும் ஓவியத்திலுங் கண்டதில்லை. ஆகா ! என்ன அழகு! ஏன் இப்படி அலங்கோலமாக இருக்கின்ருய்? நன்கு முழுகி அலங்கரித்துக்கொள்; இனி இந்த நாட்டுக்கு நீ அரசியல்லவா !

பவளேந்திரி: (இந்தப் பிதற்றலைக் கேட்டு நடுங்கிய உள்ளத்துடன்) அரசர்கோமானே ! என்னைப்போல பாக்கியவதிகள் பதினுலுலகங்களிலுமில்லை (இரண்டு பொருளில்) உம்மைப் போன்ற அரசரும் உலகில் இல்லை. உம்மை நான் அடைந்தது என் தவமே தங்களுடைய நட்பை விரும்பாதவர் யார்? கரும்பு தின்னக் கூலி வேண்டுமோ? சிறந்த புருஷோத்தமர் எனக்குக் கிடைப்பாராணல் 30 நாள் விரதமிருந்து முருகனைப் போற்றுவதாகப் பிரார்த்தனை செய்து கொண்டேன். ஆதலால் அவ் விரதம் முடியும்வரை நீர் என்னைச் சந்திக்கக்கூடாது. பிறகு உமது இஷ்டப் படி நடப்பதில் தடையில்லை.

குந்தலன், உச்சிவரை குளிர்ந்து 'விண்ணமுதும் நிகரிலாப் பெண்ணமுதே ! பேஷ். அப்படியே செய். உன் விரதம் முடிந்த பின்னர் நீயும் நானும் ஒன்றி வாழலாம். ஏ தாதிமார்களே ! என் காதலிக்கு வேண்டிய பூஜா திரவியங்களை யெல்லாம் குறைவறக்கொடுங்கள்'' என்று சட்டளையிட்டு நீங்கிருன்.

மறுநாள் பவளேந்திரி இந்த இடர்க் கடலினின்றும் எவ்வாறு கரையேறுவதென்று ஏங்கி கண்ணீர் வடித்துக் கொண்டு ஜன்னலில் உட்கார்ந்து கொண்டிருந்தாள் சேர்வைக்காரன் மெல்ல அங்கு வந்து, ஜன்னலோரமாக இருந்து கலுழ்கின்ற அம் மாதரசியைக் கண்டான். "பெண்ணே! சுகந்தானே? இந்தச் சேர்வைக்காரனுடைய சாமர்த்தியத்தை இப்போதாவது தெரிந்துகொள்''

என்ருன். பவளேந்திரி, "பழிபாவத்திற்கஞ்சா பாதகா! உனது சாமர்த்தியம் மெச்சத்தக்கதுதான். விரைவில் நீ சுகப்படுவாய்" என்ருள். சேர்வைக்காரன், "மாதே! என்னை நீ சிறிது கவனித்துக்கொள்" என்ருன். பவளேந்திரி, "ஆகா! சமயம் வரும்போது உன்னைக் கவனிக்கின்றேன்" என்ருள். சேர்வைக்காரன், "அதுவரை நான் உன்னை வந்து பார்த்துக்கொள்கிறேன்" என்று கூறிவிட்டு நீங்கினுன்.

பவளேந்திரி நாள்தோறும் நீராடி முருகப்பெருமானுடைய திருவுருவத்தை வைத்து வழிபடுவாளாயினுள். "ஏ கருணைக்கடலே! நான் முற்பிறப்பில் எந்தக் கணவனையும் மனைவியையுங் கோள்சொல்லிப் பிரித்து வைத்தேனே? எந்தப் பதிவிரதையின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொண்டேனே; எத்தனைப் பொய்சாட்சி கூறினேனே? குடியிருக்கும் வீட்டில் கொள்ளிவைத்தேனே? வேறு என்ன பாவஞ்செய்தேனே? இந்தப்பிறப்பில் இப்படி துன்பத்துக்கு மேல் துன்பமாக வந்து மூள்கின்றது! நான் சுகப்படுங் காலம் ஒன்றுளதோ? அமரர் சிறை மீட்ட குமர நாயகா! மயிலேந்த அயிலேந்தும் வள்ளலே! இனி என்னை இடர்ப்பட விடாதே. என் அப்பனே! இனி என்ருல் இத் துயர் பட முடியாது. பட்டதெல்லாம் போதும். பரமகிருபாகரா!" என்று தொழுவாள். அழுவாள்: அயர்ந்து விழுவாள்; தானே தேறி எழுவாள். அவளுடைய அல்லலைக் கண்டு கல்லும் புல்லுங் கூட உருகும்.

★ ★ ★

தனபாலசெட்டி தன் பணத்தை எடுத்துக் கொண்டு போன உத்தமசீலன் திரும்ப வாராமையால் 'அந்தோ. உத்தமசீலன் மிகவும் நல்லவனென்று நம்பி பணங் கொடுதேனே! அவனை இதுகாறுங் காணவில்லையே? எங்குற்

ருளுே? அவன் நம்மை மோசஞ் செய்தானே? அல்லது அவனே மோசம் போனுனே?' என்று கவன்று கொண்டிருந்தான்.

* *

பவளேந்திரியை மன்னன் வெறுத்துத் துன்புறுத்தி யகற்றி விட்டான் என்ற செய்தியைக் கேட்ட விந்தைபுர வேந்தனுகிய வீரவர்மன் வருந்தி, "பெண்ணே! நாம் என்ன பாவஞ் செய்தோமோ? இரண்டு புதல்வர்களைப் பெற்ருேம். அவர்கள் இளமையிலேயே நம்மை விட்டுப் பிரிந்து போனுர்கள். தவமிருந்து பெற்ற பவளேந்திரியைச் சுந்தரதருமனுக்கு தந்தோம். அவன் வேசிலோலனுகி மகளை வெறுத்து விலக்கி விட்டானும். நாம் செய்த புண்ணியம் இவ்வளவுதான் போலும். மகளை எங்கு தேடுவோம். எப்படி அவளைக் காண்போம். நமக்கோ வயது தளர்ந்து விட்டது. நமக்குப்பின் நமது நாடாளவும் சந்ததியில்லை" என்று தன் துணைவியிடம் புலம்பிக் கொண்டிருந்தான்.

* * *

பவளேந்திரி அழுதகண்ணும் தொழுத கையுமாக, "முருகா! முப்பது நாட்களுக்குள் எனக்கு அருள்புரிய வேண்டும். இன்றேல் உன் திருவடியில் உயிரை விட்டு விடுவேன். ஆனுல் உயிர் விடுமுன் என் கணவனுடை திருமுகத்தைப் பார்க்கும் பாக்கியத்தையாவது எனக்குக் கொடுத்தருள்" என்று முறையிட்டுக் கொண்டிருந்தாள்.

* * *

சுந்தரதர்மனிடம் மந்திரி போய், "பவளேந்திரியை ஏலம் போட்டுப் பணத்தை மோகனுளிடம் சேர்த்துவிட்

டேன்" என்ருன். சுந்தரதர்மன் "மெத்த சந்தோஷம்" என்று கூறி, மோகனுளிடம் போனுன். அவள் ஓடி வந்து தழுவி, "என் ஆசை துரையே! உங்களை ஒரு நிமிஷம் பார்க்கவில்லையானுல் என் கண்கள் மங்கிவிடுகின்றன. சந்திரனை யொத்த உமது சுந்தர முகத்தைக் கண்டால் என் கலி நீங்குகின்றது. அவளை ஏலம் போட்டு வந்த பணத்தை எனக்கு ஏன் அனுப்பினீர்கள்? எனக்குப்பணம் எதற்காக. உங்கள் அன்புள்ள பார்வை ஆயிரம் வராகன் பெறுமே" என்ருள். சுந்தரதர்மன், "என் கண்மணியே! உன்னைப்போல ஆசையை யொழித்த உத்தமிகள் எந்த உலகில்தான் இருப்பார்கள். ஆகா! உன் உயர்குணத்தை என்னென்று புகழ்வேன். நற்குணக் களஞ்சியமாக விளங்கும் நங்கையே! உன்னுடைய உறவைத் தவிர இனி நான் யாரையும் விரும்பேன்" என்ருன்.

மந்திரி தனக்குள், "என்ன விபரீத உலகம்! வேசி மோகத்தின் வேகந்தான் என்னே! கொண்ட மனைவியை ஏலம் போடச் செய்தது. பெரிய பெரிய ஜமீன்களை யழியச் செய்கின்றது. கொலை புலைகளைக் கரும்பாக்குகின்றது. குடிக்கும் மிடிக்கும் உறைவிடமாக இருக்கின்றது. அந்தோ! சீ! சீ! இந்த உலகமே பிச்சு; அதிலும் நமது மன்னனைப்போல மதியற்ற பித்தன் தேடினுலும் வேறு அகப்படமாட்டான். கற்பொழுக்கமுடைய கற்கண்டை விட்டு, நாடி நரம்புகளிலும் கசப்பேற்றுகின்ற வேப்பங் கொட்டையை உண்ணுகின்ருன். இவனிடம் மந்திரித் தொழில் பூண்டிருந்தால் இந்தப் பாவம் நம்மையுஞ் சாரும். ஆனுல் சொன்னுல் திருந்துவானு? நம்மீது சினந்து கொள்வான்.

> 'அறிகொன் றறியா னெனினு முறுதி
> யுழையிருந்தான் கூறல் கடன்'

என வள்ளுவரும்,

'தம்முயிர்க் குறுதி யெண்ணுர் தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் வீரர்'

எனக் கம்பநாடருங் கட்டுரைத்தனரன்றே? ஆதலின் நாம் மன்னனிடம் எடுத்து ஆனமட்டுங் கூறுவோம். அவன் திருந்தவில்லையானுல் இந்த வேலையை விட்டு நீங்கி விடுவோம்'' என்று தீர்மானித்தான்.

சுந்தரதர்மன் தனித்திருக்கும்போது மதிமிகுந்த மந்திரி வந்து வணங்கி நின்ருன்.

சுந்தர: மந்திரீ! என்ன செய்தி?

மந்திரி: மன்னர் பெருமானே! நான் கூறும் வசனங்களை நன்ருகக் கேட்கவேண்டும். என் மீது வெகுளக் கூடாது. தங்களுடைய இகபர நன்மையைக் கருதி நான் கூறப் போகின்றேன்; கேட்டு அதனை அனுசரிக்குமாறு உங்கள் திருவடிகளைப் பிடித்து மன்ருடி வேண்டுகிறேன்.

சுந்தர: மந்திரீ! என்ன ஆழமாகக் கடைகால் போடுகின்ருய்? என்னுடைய நலங் கருதி நீ யுரைக்கும் இத வசனத்தை நான் கேளாமற் போய்விடுவேனே? சொல்லு.

மந்திரி: மன்னரேறே! நஞ்சினும் கொடியது கள். ஏனெனில், நஞ்சு உண்டால் கொல்லுமேயொழிய நரகத்தை நல்காது. கள் அருந்திஞேருக்கு நரகமுந் தரும். ஆதலின் நஞ்சினுந் தீயது கள். ஆனுல் அத்தகைய கள்ளினும் கொடியது காமம். ஏனெனில் கள் அருந்திஞல்தான் மயக்கத்தைச் செய்யும்; காமம் நினைத்தாலும் பார்த்தாலும் தொட்டாலும் மயக்கத்தைச் செய்யும்.

'உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு'

என்றார் திருவள்ளுவதேவர். நெருப்புகூட தொட்டால் தான் சுடும். நெருப்புக்குப் பயந்து நீங்கினுல் சுடாது. தண்ணீருக்குள் முழுகிவிட்டால் சுடாது.

**நீருள் குளிப்பினுங் காமஞ் சுடுங் குன்றேறி**
**ஒளிப்பினுங் காமஞ் சுடும்.**

ஆதலால், ஆராய்ந்து பார்க்கில் காமத்தினுங் கொடியது இல்லை. தருமபத்தினியோடு காதலோடு வாழ்வதுதான் நியாயம். காதல் நன்று. காமந் தீது. தாங்கள் மோகனுளுடைய வலையில் வீழ்ந்து மனைவியை ஏலம் போட்டு அவள் மோகமாகிய கிணற்றில் விழுந்து கிடக்கின்றீர். அறிஞர்கள் உம்மை அவமதிக்கின்றனர். பழியும் பாவமும் சேர்த்துக்கொண்டீர். மறுமையிலும் நரகக் குழியில் இடந் தேடிக்கொண்டீர். ஆதலால் மோகனுள் உறவை விட்டு ஒழிக்குமாறு வேண்டுகிறேன்.

சுந்தர: (சிரித்து) அட பயித்தியமே. இதைத்தானு இவ்வளவு பெரிய கடைகாலுடன் ஆரம்பித்துச் சொல்ல வந்தாய்? உனக்கு மோகனுளுடைய பெருமையும் அருமையுந் தெரியாது. அவளை மற்ற வேசிகளைப் போல் நினையற்க. அவள் மிகவும் சற்குணவதி. அவளுடைய அன்பு கடலினும் பெரிது. என் உயிரை விட்டாலும் விடுவேன்; அவளை விடேன்.

மந்திரி: இராஜசேகரரே! சற்று நிதானித்துக் கேளும். வேசையர் புரியும் இந்திரஜாலம் உமக்குத் தெரியாது. அழுவார்கள்; தொழுவார்கள்; உயிர் பிரிகின்றதே என்பார்கள்; பணமே வேண்டா மென்பார்கள்; உங்கள் புன்னகை கோடி பவுன் என்பார்கள். அத்தனையும் வெறும் நடிப்புதான். மகன் இறந்ததாக நடிக்கும் நடிகன் உள்ளபடியா வருந்துகின்றான்? அதுபோல் அவர்கள் அன்பும். நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள்ளாத பொய்யன்பு.

"இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு"

என்றார் தெய்வப்புலவர். ஆதலின் தாங்கள் நம்ப வேண்டா. அம் மாய வலையை அறிவென்னும் வாளால் அறுத்தெறியும். என் சொல்லென்னுந் தோணி பற்றி அப் பாழுங் கிணற்றினின்றும் கரை யேறும்.

சுந்தர: நீ சொல்வது முற்றிலும் சரி. ஆனால் மோகனாள் அத்தன்மையானவள் அன்று. நான் அவளை விட்டால் அவள் உயிரை விட்டுவிடுவாள். அந்தப் பெண் பாவம் உன்னையும் என்னையும் பற்றும். ஆதலால் அவளை நான் எப்படித் துறப்பேன்?

மந்திரி: அறிவுடைய அரசே! என் வார்த்தையை நம்பும். நீர் அவளை விட்டுவிட்டால் அவள் உயிரை விட்டு விடுவாளா? அடாடா! என்ன ஜாலம்! என்ன மயக்கம்! அப்படி நீர் எண்ணுமாறு நடிக்கின்றாள். அவளை உம்மைப்போலவே பலர் எண்ணி யிருக்கின்றார்கள். எல்லோருக்கும் அவள் அப்படி நடந்து கொள்ளுகின்றாள்.

சுந்தர: மந்திரீ! இது என்ன புதுமை? பலர் அவளை அப்படிக் கருதுகின்றார்களா? என்ன உளறுகின்றனை? அவள் என்னைத்தவிர ஒரு புல்லைக்கூட விரும்பமாட்டாள்.

மந்திரி: உள்ளதுதான். புல்லை விரும்பமாட்டாள்; பொன்னைத்தான் விரும்புகிறாள். உங்களைப்போலவே பலர் நம்பி யிருக்கின்றார்கள். அதிகம் பேசிப் பயன் யாது? நான் கூறுவதுபோல் செய்யும். அவள் நல்லொழுக்கம் உமக்கு தானே விளங்கும். இன்று தாங்கள் மோகனாளிடம் போய், 'நான் வேற்றுத் தேயம் போகின்றேன். வருவதற்கு ஒருவாரமாகும்' என்று

கூறி வந்துவிடும்; இரவுபோய் ஒருவரும் அறியாமல் ஒளிந்துகொள்ளும்; பிறகு நடப்பதைப் பார்த்து நாளைக்கு என்னிடம் கூறும். நான் கூறியதை நேரில் பார்த்து பிறகாவது தெளிவடைவீர்.

சுந்தர: மந்திரீ ! சரி; பார்க்கின்றேன்.

மந்திரி நீங்கியபின் மன்னன் சிந்திப்பானுயினுன். "யூகியும் மதியூகியும் இப்படியே கூறினுர்கள். மதிநலம் படைத்த மந்திரியும் கூறுகின்ருன். பரிசோதித்து உண்மையை யுணர்வோம். மோகனுளிடம் தீங்கில்லை யென்று உறுதியானுல் மந்திரியைச் சும்மா விடக்கூடாது" என்று எண்ணி, மாலை மோகனுளிடம் போனுன்.

மோகனுள்: வாரும் வாரும்; வடிவழகரே! கள்ளமறியாத கற்பகமே ! வாரும். (என்று தழுவினுள்.)

சுந்தர: கண்ணே ! நான் அவசர காரியமாக இப்போது வேறு தேயஞ் செல்கின்றேன். இன்னும் ஒரு வாரத்தில் வந்துவிடுவேன்.

மோகனுள்: ஐயோ ! நான் எப்படி உயிரோடிருப்பேன். ஆசைக்களஞ்சியமே! வேண்டாம்; போகவேண்டாம்; நிச்சயமாக என் உயிர் போய்விடும்.

சுந்தர: (தனக்குள், வெளியூர் போகின்றேன் என்பதற்கே உயிரை விட்டுவிடுகிறேன் என்கின்ருளே? இவளை நான் அறவே வெறுத்துவிட்டால் வாழ்வாளா? என்றெண்ணி) காதலீ! கவலைப்படாதே. அவசியமான காரியம். அரசாங்கத்தின் கருமம். விரைவில் வந்துவிடுவேன்.

மோகனுள்: ஒரு வாரத்திற்குமேல் செல்லாதே?

சுந்தர: செல்லாது. அதற்குள்ளேயே வருவேன்,

மோகனள்: ஒரு வாரத்திற்கு மேல் ஒரு நாளாயினுங் கூடினல் நான் கிணற்றில் விழுந்து மடிந்தபோவேன்; இது சத்தியம்.

சுந்தர: சரி.

மோகனள் அவனையே உற்றுப் பார்த்து நின்ருள். அரசன் புறப்பட்டுச் சென்ருன். மாலை இருட்டியபின் மன்னன் மாறுவேடம் அணிந்து மோகனள் வீட்டுப் பின்புறமாக வந்து, அவள் அலங்கரித்துக்கொண்டு வாசலில் நின்றிருந்தாளாதலின் படுக்கை வீட்டுக்குள் நுழைந்து கட்டிலின் கீழ் பதுங்கி ஒளிந்துகொண்டான்.

இரவு பத்துமணிக்கு இரத்தின வியாபாரி மாரப்ப செட்டி வந்தான். மோகனள் அவனை யழைத்து வந்து கட்டிலின் மீதிருத்தி, "என் கண்ணுளா! எனக்கு ஒரு வாரமாக உடம்பு சரியாக இல்லை. அதனல் வரவேண்டாமெனச் சொல்லி யனுப்பினேன். இப்போது கொஞ்சந் தேவலை. ஒரு வாரமாக உம்மைப் பாராமல் இருந்தது என் உயிரே போய்விடும் போலிருந்தது. ஆகா! உங்கள் முகத்தில் என்ன அழகு ஒழுகுகின்றது" என்ருள்.

அந்தச் சமயத்தில் முன்னமே செய்திருந்த ஏற்பாட்டின்படி தோழிவந்து, "அம்மா! வைத்தியர் பணம் மூவாயிரம் பாக்கியைக் கேட்டனுப்பினுர்" என்ருள். மோகனள் "அசடு! போடீ. செட்டியார் வரும்போது ஒன்றும் கேளாதே என்று உனக்கு எத்தனை விசைச் சொல்வது" என்று கடிந்து கூறினள். செட்டியார், "கண்மணி! அவளைக் கோபிக்காதே. நான் வந்திருக்கும்போது, கேட்டால் என்ன? இந்தப் பணம் என்ன புண்ணியஞ் செய்ததோ? நான் தராமல் வேறு யார் தருவது? இந்தா" என்று மூவாயிரத்தை எடுத்து வைத்தார். மோகனள், "இந்தாடீ மூதேவி! கொண்டுபோய் அவனிடத்தில் கொடு. இனி இப்படி அசட்டுத்தனமாக நடந்துகொள்

ளாதே'' என்ருள். மாரப்பசெட்டி சிறிதுநேரம் அவளுடன் உறவாடிவிட்டு நீங்கிஞன்.

அதன்பின் இரவு பன்னிரண்டு மணிக்கு ஜவுளி வியாபாரி முத்தப்பன் வந்தான். மோகனுள் ஓடி அவனே யும் வரவேற்று கட்டிலின்மீது இருத்தி, "என் ஆசை நேசரே! ஏன் இவ்வளவு நேரம்? உம்மைக் கண்டாலே கலி நீங்குகின்றது. ஆகா! உமது கைபட்டாலே அங்கங் குளிர் கின்றது. தர்மராஜாவைப்போல் இருக்கின்றீர்'' என்று பசப்பிஞள். அந்த மடையன், "கற்பகமே! உனக்கு என் உயிரைக் காணிக்கையாகக் கொடுத்தாலும் தகும். உனது ஒவ்வொரு சொல்லும் என் உயிரைக் குளிர்விக் கின்றது. இந்தா உனக்குக் கொணர்ந்த பட்டுச் சீலேகளே உடுத்துக்கொள்'' என்று எடுத்து வைத்தான். மோக ஞள் அவனுடன் சிறிதுநேரங் கழித்து அவனே அனுப்பி விட்டாள்.

பிறகு அவ்வூர் அத்தர் வியாபாரி அங்கணன் வந் தான். அவனே போய் அழைத்துக் கட்டிலில் இருத்தி "எப்பொழுது வந்தீர்?'' என்ருள். "நான் வந்து வெகு நேரமாயிற்று; நீ பூஜை செய்துகொண்டிருக்கின்ருய் என தோழி சொன்ஞள். அதஞல் வெளியே உள்ள அறையில் அப்படி படுத்தேன்; அயர்ந்து தூங்கிவிட்டேன்'' என் ருன். மோகனுள், "இன்று வெள்ளிக்கிழமை; அதஞல் இலட்சுமி தேவியைப் பூசித்து இப்பொழுதுதான் சாப் பிட்டேன். ஏது நாலு நாட்களாக உம்மைக் காணவில்லே'' என்ருள். அங்கணன், "மாதரசே! என் மனேவிக்கும் எனக்கும் சண்டை. உனக்கு நான் பணந் தருவதுபற்றி என்னே அவள் கண்டித்தாள். கன்னத்தில் பத்து அறை கொடுத்தேன். என் சொத்தைத்தானே உனக்கு நான் தருகிறேன். என்மீது நீ கொண்டிருக்கும் அன்புக்கு என் உயிரைக் கொடுத்தாலும் ஈடாகாதே'' என்று உளறிஞன்,

அதற்குள் தோழி வந்து "அம்மா! பட்டுப்புடவைகள் விலைக்கு வந்திருக்கின்றன; பாரும்" என்று முத்தப்பன் கொடுத்து விட்டுப்போன சேலைகளைக் கொணர்ந்து காட்டினள். மோகனுள், "சீ மூதேவி! அவர் வரும்போது ஒன்றும் பேசாதே என்று உனக்கு எத்தனை முறை சொல்லுவது? சிவபூஜையில் கரடி புகுந்தாற்போல் நடுவில் வந்து புகுந்தனையே" என்று வைதாள். அங்கணன், "என் கரும்பே! அவளைக் கோபிக்காதே. நான் வந்தபோது காட்டினுல் என்ன தப்பு? இந்தா; நேற்றுதான் என் வீட்டை விற்று உனக்குத் தரும்பொருட்டு வைத்திருந்தேன்" என்று 2,500 ருபாயை எடுத்து வைத்தான்.

மோகனுள், "ஐயோ! வீட்டை ஏன் விற்றீர்கள்? நான் உங்களைப் பணமா கேட்டேன்? நீங்கள் சும்மா வந்து போனுல் போதாதா?" என்றுள். அங்கணன், "அன்னமே! வீட்டை விற்றது தானு ஒரு பெரிய காரியம்? ஒவ்வொருவன் மாட்டை விற்கின்றுன்; மனைவியை விற்கின்றுன்; திருடிக்கூடத் தருகின்றுன். நீ என் மீது வைத்துள்ள காதலுக்கு நான் உனக்கு அடிமையா யிருந்தாலும் காணுது" என்று கூறி சிறிது நேரங் கழித்துவிட்டு நீங்கினுன்.

பின்னர் மோகனுள் தன் தோழியை நோக்கி "தோழி! இந்த அறிவுகெட்ட அசடர்களுக்கு மண்டையில் மூளையே கிடையாது. எல்லோரும் உயிரைத் தருகின்றேன் என்கின்றுர்கள். உயிரை வாங்காமல் விடப் போகின்றேனே? இன்றைக்கு நல்ல வேட்டை. நாளை எந்த பட்சி வருமோ? பார்ப்போம். புதிய பட்சிகளாகப் பிடித்துவா; அப்போதுதான் நிரம்பப் பணம் வரும்; அத்தர்கடை அங்கணன் கை வரண்டுவிட்டது. மெள்ள அதிர்வெடி வைத்து அவனைக் கழிக்கவேணும். மாரப்பன் நல்ல தீரப்பன் தான். இந்த புத்தி இல்லாத பொரி

யுருண்டைகளுக்கெல்லாம் தலைவன் சுந்தர தர்மன். அவன் வர இன்னும் ஒருவாரமாகும். அதற்குள் சில புதுப்பட்சிகளைப் பிடி! மனைவியை ஏலம்போட்ட அந்த மடச்சாம்பிராணிக்கு நமது மயக்கம் சரியாக தலைக்கு ஏறியிருக்கின்றது. பம்பரம்போல் நம்மிடம் ஆடுகின்றான். நாளைக்கு அந்த மக்குப் பிண்டம் மளிகைக்கடை மன்னார்சாமி வருவான். அவன் வந்ததும் நீ அழுதுகொண்டே வந்து அம்மா நமது நகைப்பெட்டி களவு போய்விட்டது என்று சொல்லு. அவனிடம் நாளைக்கு உறிஞ்சிடுவோம். ஒருநாள் வலையிலேயே அந்த சேர்வைக்காரன் சிக்கிக்கொண்டு நாம் சொன்ன காரியத்தை முடித்தான். பவளேந்திரியை விற்பதற்கு ஏற்பாடு செய்துவிட்டான். அந்தத் தடிமாட்டை அதற்குப் பின்பு காணவே இல்லை. அதனால் நூறாயிரம் பொன் கிடைத்தது. தோழி! அந்த மயக்க மருந்து தீர்ந்துவிட்டது. இன்னும் ஒரு புட்டி நிரம்பத் தயார் செய்துவை. இங்கு வருகின்ற மகிஷங்களுக்கு வேண்டும்'' என்று சரமாரியாகப் பேசினாள்.

சுந்தரதர்மன் இவற்றை எல்லாம் கண்கூடாகக் கண்டுங் கேட்டும் அடங்காத கோபமுற்றான். அவன் அறிவை மறைத்திருந்த காம மயக்கமாகிய திரை அறுந்து விழுந்தது; மோகமாகிய பனி நீங்கி தெளிவு என்ற கதிரவன் உதித்தான். கட்டிலை உதைத்துக் கொண்டு வெளிப்பட்டான்; மோகனாங்கியை ஒரு உதை கொடுத்தான். அவள் அவனைக்கண்டு திகைப்பும் அச்சமுங் கொண்டு, ''என் கண்ணாளா? நீர்வெளிதேயம் போகவில்லையா? உங்கள் காலால் உதைக்க நான் என்ன தவம் செய்தேனோ'' என்று பழைய பல்லவியைப் பாடத் தொடங்கினாள். சுந்தரதர்மன் மீண்டும் அவளை உதைத்து, ''குணங்கெட்ட குடிகேடி! நான் இங்கு நடந்ததெல்லாம் இந்தக் கட்டிலின் கீழிருந்து நன்றாகப் பார்த்துக்

கொண்டுதான் இருந்தேன். அடிபாவி! என்ன வஞ்சனே! என்ன சூழ்ச்சி! எத்தனைப் பசப்பு! உன் வலேப்பட்ட மூடர்களின் மூளையின் கிறுகிறுப்புத்தான் யாது? ஆகா என்ன இந்திரஜாலம். சீசீ! உன் மாயவலேயில் சிக்கி நான் மடையனுனேன். என் மனைவியாகிய மாணிக்கத்தை விற்று கண்ணுடித் துண்டாகிய உன்னை மதித்து மங்கினேன். நரக லோகத்திற்கு வழிதேடினேன். ஐயோ! என் அருமந்தப் பேருகிய பவளேந்திரியை யிழந்தேனே! சண்டாளீ! உன்னைச் சித்ரவதை செய்தாலும் போதாதே! உன்னை நான் கரும்பாக எண்ணினேனே? இரும்பு என்றுணராது கெட்டேனே. உன்னை நற்குணக் களஞ்சியமென்று நம்பினேனே? என்னைப்போல் எத்தனை பேர் உன்னை நம்பிக் கெட்டுப் போகின்றுர்கள். படுகுழியைப் பரகதி என்று மோசம் போன என் மதியை நோவதா? நீ செய்த சதியை நோவதா? இனி எனக்குக் கிடைக்கும் கதியை நோவதா? பதிவிரதையாகிய பவளேந்திரிக்கு வந்த விதியை நோவதா? எதனை நோவது?" என்று வைது உதைத்து உருட்டி, தன் சேவகரை யழைத்து அவளை அந்தக்கணமே சிறை செய்தான். மோகனுள் கையும் பிடியுமாய் களவு வெளிப்பட்டதனுல் தன் மோசத்தைக் குறித்துப் பெரிதும் வருந்தி சிறையில் கிடந்தாள்.

சுந்தரதர்மன் மதிமந்திரியை யழைத்து, "மந்திரீ! உனக்கு நான் எனது மன உணர்ச்சியை எந்த மொழியில் உரைப்பது என்று உணராமல் திகைக்கின்றேன். நீ கூறியவை யாவும் உண்மை. வேசி மோகத்தால் நான் வீணுதி வீணனுனேன். பாவச் சேற்றைப் பூசிக்கொண்டேன். பழி யென்னும் படுபள்ளத்தில் வீழ்ந்தேன். அப்பாதகியைச் சிறை புரிந்தேன். நல்வழிப்பட்டேன். நின்ஞல் என் மன இருள் விலகியது. இனி நான் செய்யக் கடவது யாது? என் பவளேந்திரியை நான் அடை

வேணு? அதற்கு ஏதாவது வழியுண்டா? நீ என்னை காமத்தளையினின்று விடுவித்தாய்" என்ருன்.

மந்திரி தன் முயற்சி பயன் பெற்றதற்குப் பெரிதும் மகிழ்ந்தான். மன்னன் திருந்தியது குறித்து ஆனந்த வெள்ளத்தில் அழுந்திஞன். தன் அரசனைப் பணிந்து, "என் உயிரினுமினிய அரசே! இன்றே நானும் இந்த அரசும் உலகமும் உய்ந்தனம்.

'நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்'

என்பது ஆன்ருேர் அறவுரை. அரசன் எவ்வழியோ அவ்வழி குடிகள். தாங்கள் அறநெறியில் நின்ருலொழிய உலகம் அறநெறியில் நிற்காது. இனி எமக்குக் குறைவில்லை. தாங்கள் கவலையை விடுங்கள். என் தாய் பவளேந்திரி குந்தல தேசத்தில் அம் மன்னனுடைய காவலில் இருப்பதாக ஒற்றர்கள் மூலம் உணர்கிறேன். அவனை எதிர்க்க நம்மிடம் போதிய பலமும் ஆயுதமும் இல்லை. தவிர குற்றம் நம்மிடமுளது. நாம் போருக்குப் போனுல் உலகம் நம்மையுந் தூற்றும். "மனைவியை ஏலம் போட்டு விட்டுப் பின்னர் சண்டைக்கு வந்துவிட்டான்" என்று ஏசுவர். தந்திரத்தாலேயேதான் என் தாயை நீர் அடைய வேண்டும். மாசிலாக் கற்புடைய என் மாதா தங்களை யடையும் பொருட்டு மாதவ நோன்பிருக்கின்ருள் என்றும் ஒற்றராலுணர்ந்தேன். தாங்கள் ஒரு பரதேசியைப் போல் உருவெடுத்துச் செல்லும். உம்முடன் குதிரையும் குதிரைச் சேவகனும் தொடர்ந்து வரட்டும். தாங்கள் அன்னம் ஏற்பது போல் சென்று என் அன்னையைக் கண்டு மெல்ல உம்மை உணர்த்தி, இரவு வந்ததும் அழைத்துக் கொண்டு குதிரையிலேறி என் தாயுடன் வந்து சேரும். இதுதான் சுலபமான வழி" என்ருன்.

மன்னன் கேட்டு மகிழ்ந்தான். மந்திரியின் ஆலோசனையை மெச்சினன். உடனே அரசகோலத்தை மாற்றி காவித் துணியாலாகிய நெடு அங்கியை யணிந்தான். உருத்திராக்க மாலையை நிரம்பப் போட்டுக்கொண்டான். திருநீறு பூசித் திருவோட்டைக் கையிலெடுத்தான். வேசி வலைப்பட்ட தான் ஓடெடுப்பது நியாயமென்று கருதினன். ஒரு சிறந்த குதிரையும் குதிரைச் சேவகனும் தொடர்ந்து வரக் குந்தலதேசம் வந்தான். சேவகனையும் குதிரையையும் ஒருபுறத்திலிருக்கச் செய்து, ஊருக்குள் நுழைந்து புலம் விசாரித்து தன் மனைவி சிங்கார மாளிகையில் இருப்பதாகத் தெரிந்து அங்கு சென்ருன். பிச்சைக்கார உருவத்திலிருந்ததால் தடையின்றி உள் புகுந்தான். வீட்டு வாசலிடம் போய் நின்ருன்.

உள்ளே பவளேந்திரி முருகப்பெருமான் திருவுருவத்தின் முன்னின்று, "அமரர் துயர்கெடுத்த ஆறுமுகத்தரசே! அரசனுக்குச் சொன்ன நாள் முப்பதும் இன்ருேடு முடிகின்றது. எனக்கு உயிர்வாழ்வும் இன்ருேடு முடிகின்றது. பெருமானே! மறுபடியும் என்னைப் பெண்ணுகப் பிறக்க வைக்காதே. பேயாகவேண்டுமாஞலும் பிறக்கவை. சுவாமீ! வள்ளிமணவாளா! உன் மனம் இரும்பாகி விட்டது. என்ன என்ன விதமாகச் சொல்லி முறையிட்டும் உனக்குப் பன்னிரு செவி யிருந்தும் ஏறவில்லை. ஏ கருணநிதி! நான் சாகின்றேன். நீ சுகமாக இருந்து வாழ். 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்ற அமுதமொழி என் விஷயத்தில் பொய்த்துவிட்டது. இன்றிரவு நான் உன்திருவடி சேர்வேன்" என்று கண்ணீர் சொரிந்து துதித்துக்கொண்டிருந்தாள்.

வாசலில் நின்ற சுந்தரதருமன் இனிய குரலால் கல்லுங் கரையுமாறு அடியில் உள்ள பாடலைப் பாடினன்,

ஓசைக் கடலுள் ஒளித்திட்ட உயர்சூர் உரங்கிண்டொழித்தவனே
ஆசைக் கடலுள் அழுந்திமிக அல்லலுற்றே னரும்பாவி
காசைக் கொடுத்து மதிவிடுத்துக் கற்பு மனைவி தனைவிற்று
வேசை வலையில் விழ்ந்துழன்ற வீணனுனேன் வேலவனே.

இப் பாடலைக் கேட்ட பவளேந்திரி திடுக்கிட்டாள். தன் கணவன் குரல்போலிருக்கக் கண்டாள். பாடலின் கருத்தையுஞ் சிந்தித்தாள். ஓடி வந்து பார்த்தாள். கணவன் என உணர்ந்தாள். அன்னங் கொணர்ந்தாள். திருவோட்டில் போட்டுப் பின்புறமாக வருமாறு குறிப்பாகக் கண் காட்டினுள். மன்னன் தன் மனைவியைக் கண்டு மகிழ்ந்து பின்புறமாகப் போனுன்.

பவளேந்திரி பின்புறமாகப் போய் தன் கணவன் கால்மேல் விழ்ந்து அழுதாள். சுந்தரதர்மன், "பெண்ணே! யாராவது வந்துவிடப் போகின்ருர்கள். விஷயம் கெட்டுப் போகும். என்னுல் உனக்கு இத்துணை துயரம் வந்தது. என்னை மன்னிப்பாய். அழாதே. நமது துயரமாகிய இரவு விடியுங் காலம் நெருங்கிவிட்டது. நான் இரவு 15நாழிகைக்குக் குதிரையுடன் வருவேன். நீ மெல்ல கதவைத் திறந்து கொண்டு வா; இருவரும் குதிரைமீதேறி நம்நாடு போய் சுகமாக வாழலாம்" என்ருன். பவளேந்திரி, "சுவாமி! பாக்கியம்; என் தவம் பலித்தது. நான்மேல் மாடியில் படுத்திருப்பேன். ஜன்னலில் ஒரு கயிற்றைக் கட்டி தொங்கவிடுகிறேன். அதன் நுனியை நான் காலில் கட்டிப் படுத்துக்கொள்ளுகிறேன். நீங்கள் வந்து அதை அசைத்தால் நான் மெல்ல எழுந்து நூல் ஏணியின் வாயிலாக வந்துவிடுவேன். பிறகு குதிரை மீது ஏறிப்போவோம். குதிரையுடன் வந்துவிடும்" என்ருள். மன்னன், "சரி" என்று நீங்கினுன்.

மாலை குந்தலராஜன் சிங்கார மாளிகை வந்து பவளேந்திரியைக் கண்டு, "என் காதற் கிளியே! இன்ருேடு

நீ சொன்ன கெடுவும் உன் பூஜையும் முடிகின்றது. நாளை முதல் நீ எனக்கு மனைவியாவாய். சிறந்த ஆடையாபரணங்களை யனுப்புகிறேன்; அணிந்து கொள். நாளை வந்து உன்னைச் சந்திக்கிறேன்" என்று பிதற்றிவிட்டுப் போனான்.

இரவு 10 நாழிகைக்கு சுந்தரதர்மன் குதிரையுடன் சிங்கார மாளிகை வந்தான். குதிரையை ஒரு மரத்தில் கட்டிவிட்டு நடு இரவையும் காவலர்கள் அயர்வதையும் எதிர்பார்த்து ஒரு மரத்தடியில் சற்று சாய்ந்தான். தூக்கம் என்னும் அரக்கன் அவனைச் சூழ்ந்துகொண்டான். மயக்கப் பேயால் விழுங்கப்பட்டான்; தூக்கம் பொல்லாததன்றோ? இரண்டு, மூன்று இரவாகத் தூங்காதிருந்தாலும் நெடுந்தூரம் வந்த அயர்ச்சியாலும் பகலெல்லாம் அலைந்த அலைச்சலினாலும் அவனை யறியாமல் தூங்கிவிட்டான்.

இரவு 15 நாழிகை யாயிற்று. கள்வன் ஒருவன் கன்னக் கோலுடன் அங்கு வந்தான். காவலர் சற்று கண்மூடி அயர்ந்திருந்தனர். பைய உள் நுழைந்தான். மரத்தடியில் தூங்கும் பரதேசி வடிவத்துடன் உள்ள மன்னனைக் கண்டான். 'யாரோ ஒரு பரதேசிப்பயல் நன்றாகத் தூங்குகின்றான்' என்று சொல்லிக்கொண்டு அப்புறம் போனான். குதிரை நிற்பதைக் கண்டான். 'இண்ணைக்கு நாம் நல்ல முஞ்சியிலே முழிச்சோம்; காத்தவராயசுவாமி நமக்குக் கந்தாயம் தருவார். என்று எண்ணி, உள்ளே நுழைந்து அகப்பட்டதை அடித்துக்கொண்டு போகச் சிந்தித்துப் பார்த்தான். ஜன்னலில் ஒரு கயிறு தொங்கப்பார்த்தான். அக் கயிறு மூட்டை கட்ட ஆகுமென அதை இழுத்தான். பவளேந்திரி தன் கணவன் தான் இழுக்கின்றான் என்றெண்ணி மெல்ல நூலேணியில் இறங்கி வந்தாள். கள்வன் 'யாரோ ஒரு பெண் வருகின்றாள்' என்று பார்த்தான்;

நல்ல இருட்டானதால் ஆளின் அடையாளம் அறியாமற் படிக்குக் கள்ளனைக் கணவனென்றெண்ணி 'குதிரை எங்கே? கொண்டுவாரும்' என்ருள் பவளேந்திரி. கள்ளன் கொணர்ந்து நிறுத்தினன். பவளேந்திரி அதன் மீதேறி 'நீரும் ஏறும்; நம் தேசம் போவோம்' என்ருள். திருடன் 'நம்ம பாக்கியமே பாக்கியம்! காத்தவராயசாமி ஒரு பொஞ்சாதியைக் கொடுத்தார்' என்று சந்தோஷித்து குதிரை மீது ஏறி ஓட்டினன். சிறிது தூரஞ் சென்ற பின் பவளேந்திரி, 'நாதா! இனி நமக்குப் பயமில்லை. ஊர் தாண்டிவிட்டோம். விடிவதற்கு முன் நெடுந்தூரம் போய்விடவேண்டும்' என்ருள்.

திருடன்:— அடி குட்டி! பேசாமல் வாடி. சத்தம் போட்டியானு யாராவது புடுச்சுக்குவாங்கோடி. உனக்கும் எனக்கும் கையிலே காப்பு வந்து விடும். தெரிஞ்சிதா? நம்ப வூட்டுக்குப் போய் அப்பாலே பேசிக்குவோம்.

பவளேந்திரி:— ஐயோ! இது என்ன வேற்றுக் குரலாக இருக்கின்றதே! தெய்வமே! இன்னும் என் கன்மந் தொலையவில்லையா?

திருடன்:— அடி குட்டி! ஏண்டி சத்தம் போடரே? வாடி பேசாமே. திருடிவைச்ச பணம் ரொம்ப இருக்குதடி. எல்லாம் உனக்குத்தாண்டி. இன்னும் எனக்குக் கண்ணுலம் ஆகலடி. காத்தவராயசாமி உன்னை எனக்குக் கொடுத்தாரடி; நீயும் நானும் ஜோக்கா இருக்கலாண்டீ.

பவளேந்திரி:— ஓய்! திருடனு?

திருடன்:— ஆமாண்டி குட்டி! திருடத்தான் வந்தேன். நீ அம்பிட்டே. வூட்டுக்குப்போய் ஆக்கித் திண்ணுட்டு ஜோரா இருக்கலாம் வாடீ.

பவளேந்திரி:— (தனக்குள்) 'பட்ட காலிலேயே படும். கெட்ட குடியே கெடும்' என்ற பழமொழி சரியாக இருக்கின்றது. இவனிடமிருந்து சுலபமாகத் தப்பித்துக்கொள்ளலாம். முருகா! என்னைக் காப்பாற்று! என்று எண்ணி, அப்பா திருடா! உன் குடிசை எங்கே யிருக்கின்றது?

திருடன்:— ஆச்சி! இன்னம் கிட்டத்திலேதான்; காட்டுக்கு வந்துவிட்டோம். அந்த மலையடியிலே இருக்குது வா. பயப்படாதே.

பவளேந்திரி:— அப்பா! என்னை இப்படி அழைத்துப் போனால் உனக்கும் எனக்கும் பெருமையில்லை. இதோ விடிந்துவிட்டது. நான் இந்த மரத்தடியில் இருக்கின்றேன். நீ இந்தக் குதிரையுடன் குடிசைக்குப் போய் உன் உறவினர், மேளம் தாளம் இவைகளுடன் வந்து என்னைப் பலர் முன் மாலையிட்டு அழைத்துக் கொண்டுபோ; அப்போது நான் உன்னுடன் வருவேன். நான் அரசன் மகளல்லவா?

திருடன்:— ' சரிசரி. உன்னிஷ்டப்படியே செய்றேன். உன் பேர் என்ன?

பவளேந்திரி:— என் பேர் பவளம்.

திருடன்.— 'ம்......பவளம்; பவளம் இதோ வந்துவிட்டேன். இங்னமேயே இருடி' என்று கூறிவிட்டுக் குதிரையுடன் தனது குடிசைக்குப் போனான்.

பவளேந்திரி ஒருவாறு நம்மைப் பிடித்த சனி தொலைந்தது என்று காட்டுக்குள் நுழைந்து ஓடினாள். எங்கும் இருளடர்ந்த காடு. ஆற்றுவாருந் தேற்றுவாருமின்றி அலைந்தாள். காலில் முள் தைத்தும் முள் மரங்கள் பொன் மேனியைக் கிழித்தும் வருந்தினாள். நீண்டதூரம் போனபின் அங்கு ஒரு பூங்காவைக் கண்டாள். அதற்குள் ஒரு

ஆஸ்ரமத்தையும் அதன் முன் தர்ப்பாசனத்துள் இருக்கும் தவமுனிவரையுங் கண்டாள். உள்ளத்தில் ஆறுதல் கொண்டாள். ஓடி முனிவர் கால்மேல் வீழ்ந்து அழுதாள்.

முனிவர்:—அம்மா! அழாதே; எழுந்திரு. உன் அல்லல் ஒழிக. நீ யார்? ஏன் இந்தக் காட்டுக்குள் வந்தனை?

பவளேந்திரி:—ஸ்வாமீ! நான் விந்தைபுர மன்னன் வீர வர்மன் மகள். என் பெயர் பவளேந்திரி. விதர்ப்ப தேச மன்னரை மணந்தேன். அவர் வேசி வலைப் பட்டு என்னை விற்றுவிட்டார். குந்தல மன்னன் என்னைச் சிறைப்படுத்தினான். என் கணவனை யடை யும் தருணத்தில் கள்வன் என்னை அபகரித்து வந்து விட்டான். அவனிடமிருந்து தப்பித்து தங்கள் திரு வடியைத் தஞ்சம் புகுந்தேன்.

முனிவர்:—குழந்தாய்! வருந்தாதே. வடிவேற்பெருமான் காப்பாற்றுவார். கதிரவன் வழிமாறினும் என்மொழி மாறாது. விரைவில் நீ சுகப்படுவாய். சிலதினம் இங்கிரு.

பவளேந்திரி மகிழ்ந்து முனிவர் பெருமானுக்கு மல ரெடுத்துக் கொடுத்தும், காய்கனி தேடிக் கொடுத்தும் கணவனை நினைந்து கண்ணீர் சொரிந்துகொண்டிருந் தாள்.

அங்கே சுந்தரதர்மன் கண்விழித்துப் பார்த்தான். குதிரையைக் காணவில்லை. "அந்தோ! தூங்கி மோசம் போனேனே. என் கற்பகம் கிட்டியும் அடையக் கொடுத்துவைக்காத பாவியானேன். பவளேந்திரி உள்ளி ருக்கின்றாளோ? அல்லது குதிரை மீதேறி நாம் படுத்திருப் பதைப் பாராமல் வெளியே சென்றாளோ? நித்திரை ஒரு பெரிய சத்துரு" என்று புலம்பினான். பொழுது புலர்ந் தது. பவளேந்திரி சிங்கார மாளிகையில் இல்லையென்று

தெரிந்துகொண்டான். "என் கண்மணியை இழந்தேன். அவள் என்னைத் தேடிக்கொண்டுதான் போயிருப்பாள். இனி அவளைக் காணமல் நகர் போகேன்" என்று "பவளேந்திரி! பவளேந்திரி!" என்று வாய்விட்டழைத்துத் தேடுவானுயினன்.

சிங்கார மாளிகையிலிருந்து தோழிகள் பவளேந்திரியைக் காணது திகைத்து குந்தலராஜனிடம் போய், "அரசே! பவளேந்திரியம்மையைக் காணவில்லை" என்ருர்கள். மன்னன், "பவளேந்திரி! என்னை மோசஞ் செய்துவிட்டு எங்கு போனுய்? உன்னை நீங்கி நான் எப்படி உயிர் வாழ்வேன்? இந்த அரசுதான் எனக்கு எதற்கு?" என்று பவளேந்திரியைத் தேடிக்கொண்டு திரிவானுயினன்.

சேர்வைக்காரன் பவளேந்திரி எங்கோ சென்றுவிட்டதைத் தெரிந்து எப்படியும் அவளைத் தேடி யடையவேண்டும் என்றெண்ணி "பவளேந்திரி, பவளேந்திரி" என்று பிதற்றிக்கொண்டு பேய்போல் அலைவானுயினன்.

திருடன் தன் குடிசைக்குப் போய், 'வாங்கடா அண்ணமாரே! மவராஜா மவள் எனக்குப் பொண்டாட்டியாயிட்டா. வாங்க, வாங்க!' என்று தன் இனத்தாரையும் கொட்டு முழக்கையும் அழைத்துக்கொண்டு மரத்தடிக்கு வந்தான். அங்கே பவளேந்திரியைக் காணது மருண்டான். இனத்தார் "அடே திருடா! ஏது எங்களையே ஏமாத்திப்பூட்டாயே! எங்கடா மவராஜா மவள்?" என்று கேட்டனர். திருடன், "அட அண்ணமாரே! என்னை ஏமாத்திட்டு பூட்டாடா அவள். நீங்க போங்க; நான் அவளைத் தேடிக் கொண்ணுர்ரேன்" என்று அவர்களையனுப்பிவிட்டு "பவளம், பவளம்' என்று காடெல்லாம் அலைந்துகொண்டு திரிந்தான்.

சமயங்கள் பலவும் ஒரே பரம்பொருளைக் குறித்து வேறு வேறு எண்ணத்துடன் தேடிச் செல்வதுபோல

பவளேந்திரியை இப்படி இவர்கள் தனித்தனியாகத் தேடித் திரிந்தார்கள்.

★ ★ ★

பவளேந்திரி ஒருநாள் காலை தண்ணீர் எடுக்க ஒருநீர் நிலைக்குச் சென்ருள். அந்த நீர் நிலையில் கவலையற்று மீன்கள் துள்ளி விளையாடுவதையும், பாயைச் சுருட்டி விரிப்பது போல் அலை வீசுவதையும் கண்டு தன் கவலையை மறந்து நின்ருள். யூகி, மதியூகி என்ற இருவரும் அங்கு வந்தனர். (முன்னே சுந்தரதர்மனிடம் பிரதானியராக இருந்து அவனுடைய தீயொழுக்கத்தைக் கண்டு விலகினவர்கள்) பவளேந்திரியைக் கண்டு இன்னுளென்று அறியாதவராய் காமுற்றனர்-

யூகி:—தம்பீ! அந்தப் பெண் வனதேவதையோ? அரமடந்தையோ? யாவள்?

மதியூகி:—அண்ணு! கால் நிலந் தோய்வதாலும், கண்ணிமைப்பதாலும் அவள் மனிதப் பெண்தான். கற்பகக் கொடிபோல் நிற்கின்ருள்.

யூகி:—தம்பீ! அவளை நான் மணந்துகொள்ள விழைகின்றேன்.

மதியூகி:—அண்ணே! நானும் அப்படியே விழைகின்றேன்.

யூகி:—தம்பீ! தமையன் விரும்பிய பெண் உனக்குத் தாயல்லவா?

மதியூகி:—அண்ணே! தம்பி விரும்பிய !பெண் உனக்கு மகளல்லவா?

யூகி:—சரிசரி; நமக்குள் வாதம் வேண்டாம். சுந்தோபசுந்தா! சரித்திரம் போல ஆகக்கூடாது. அவளை நெருங்கிக் கேட்போம். அவள் யாரை விரும்புவாளோ அவருக்கு அவள் மனைவி.

என்று இருவரும் பவளேந்திரியை நெருங்கி "பெண்ணரசே! நீ யார்? எங்களிருவரில் யாரை நீ விரும்புகின்ருய்? விரைவில் கூறு" என்ருர்கள். பவளேந்திரி மிகவும் பயந்து மயிலேறும் மாணிக்கத்தைத் தியானித்து, "ஐயோ! என் பேர் பவளேந்திரி. நீங்கள் இருவரும் சிறந்தவர்களாகவே இருக்கின்றீர்கள். அந்த வில்லை என்னிடம் கொடுங்கள். நான் ஒரு அம்பைத் தொடுக்கின்றேன். அதைப் போய் யார் முதலில் எடுத்து வருகின்ருரோ அவரை நான் விரும்புவேன்" என்ருள். இருவரும் "சரி; அப்படியே செய்வோம்" என்ருர்கள். பவளேந்திரி, "உங்கள் உடுப்பை அவிழ்த்து வைத்துவிட்டு கோவணத்துடன் ஓடி எடுத்து வரவேண்டும்" என, அவர்களும் இசைந்து, உடுப்பையும் வில்லம்பையும் கீழே வைத்தார்கள். பவளேந்திரி இளம் பருவத்தில் சிறிது விற்பயிற்சியும் செய்திருந்தாளாதலிளுல், வில்லை எடுத்து வளைத்து நாணேற்றி ஒரு கூர்மையான கணையைத் தொடுத்து விசையாக விடுத்தாள். உடனே இருவரும் "நான் முன், நான் முன்" என்று ஓடினுர்கள்.

அதைக் கண்ட பவளேந்திரி "காமுகர்கள் இப்படித்தான் கோவணுண்டியாக ஆவார்கள் என்பதற்கு நீங்கள் ஒரு சாட்சி" என்று சொல்லி, அந்த ஆணுடுப்பை எடுத்து அணிந்து, "இனி நாம் சிலகாலம் ஆண் வடிவத்துடன் இருந்தால் இந்தத் தொந்தரவு வராது. கணவனைக்காணும் வரை இந்த ஆணுடை யிருக்கட்டும். கையாதரவுக்கு வில்லம்புண்டு" என்று எண்ணி வேறு பக்கம் வேகமாக நடந்தாள்.

இருவரும் ஓடி ஒருவன் அம்பின் அடியைப் பிடித்தான்; ஒருவன் நுனியைப் பிடித்தான். மீண்டும் பவளேந்திரியிடம் போய் அவள் சொற்படி நடப்போம் என்று திரும்பி வந்து பார்க்க, அவளும் தங்கள் உடுப்பும் அங்கில்லாமையைக் கண்டு மனம் வருந்தி, "இதுகாறும் நாம்

காமம் என்பதை அறியாதிருந்தோம்; இப்போது சிறிது அதனையடைந்ததற்குத் தண்டனை கிடைத்தது; நமது குற்றத்திற்கு இது ஏற்ற சிக்ஷைதான்; ஆயினும் அம் மங்கையைக் கண்டு மன்னிப்பு கேட்டுக்கொண்டா லொழிய இந்தப் பாவம் தீராது'' என்று எண்ணி. பவளேந் திரி, பவளேந்திரி'' என்று தேடிச் செல்வாராயினுர்கள்.

பவளேந்திரி செவ்வேளைச் சிந்தித்துக்கொண்டு செல்ல அவ்வழியில் சேர்வைக்காரன் "பவளேந்திரி பவளேந்திரி'' என்று பிதற்றிக்கொண்டு வந்தான். பவளேந் திரி அவனைக் கண்டவுடன் சினந்து ஒரு கூர்மையான பாணத்தைத் தொடுத்தாள். அது அவன் மார்பிற்பட்டு "ஐயோ !'' என்று கதறி விழுந்து மடிந்தான். அவன் பிணத்தை நாயும் நரியும் அருந்தலுற்றன. பவளேந்திரி அது கண்டு, "இப்பாதகனுக்கு இத் தண்டனை ஏற்றது தான்'' என்று கூறி வழி நடந்து மாலை சங்கபுரி வந்து சேர்ந் தாள். அதன் அருகில் ஒரு அழகிய நந்தவனம். அதில் பவளேந்திரி சென்று கனிகளைப் பறித்துத் தின்று தண்ணீர் பருகி ஒரு பூமரத்தடியில் படுத்து, சற்று கண்ணயர்ந்தாள்.

அந்த சங்கபுரத்தைப் புரக்கும் சங்குசீல மன்ன னுடைய மகள் சந்திரரேகை தன் தாதிகளுடன் இரதிதேவி யைப்போல் நந்தவனம் வந்து விளையாடினுள். முடிவில் பூமரத்தின் கீழ் படுத்திருக்கும் பவளேந்திரியைக் கண் டாள். ஆணுடை யணிந்திருப்பதால் "இந்திரனே? சந் திரனே? மதனனே? மரகதவண்ணனே? முருகனே'' என்று ஐயுற்ருள். காதல் வெள்ளத்தில் முழுகினுள். உள்ளம் உருகி அன்பு பெருகி அயர்ந்தாள்

"இந்திரனே விடையேறும் எம்பெருமான் ஈன்றவருட்
சுந்தரனே இரதிமகிழ் துணைவனே துகளகன்ற
சந்திரனே வானவர்கோன் தனிமகனே மனமுருக்குந்
தந்திரனே யார்கொலிவன் தருமகுணத் தனிமுதலோ''

என்று பற்பல எண்ணி ஏங்கினுள். தன் உயிர்ப் பாங்கியை யழைத்து, "பாங்கி! இவர் யார்? பெரிய குடும்பத்திற் பிறந்த பெருந்தகைபோல் காண்கின்றது. இது போன்ற அழகிய வடிவை நான் இதுகாறுங் கண்டதில்லை. எந்த அரசகுமாரனே? இவரை நான் கணவராகப் பெறும் பாக்கியத்தைப் பெறவேனே? நீ சில தோழிகளுடன் போய் சிவிகை கொண்டுவந்து இவரை ஏற்றி அரண்மனைக்கு அழைத்துப்போய் இராஜோபசாரஞ் செய்து என் பிதாவிடம் என் கருத்தைத் தெரிவித்து விரைவில் திருமணத்திற்கு ஏற்பாடு செய்வாய்" என்று கன்னிமாடஞ் சேர்ந்தாள்.

பாங்கி உடனே ஏவலர்மூலம் முத்துச்சிவிகையைக் கொணர்ந்து இனிது பாடினுள். பவளேந்திரி, கண் விழித்தாள். பாங்கி பணிந்து, "சுகுமாரா! இந்தச் சிவிகையில் ஏறுங்கள். எங்கள் அரசர் உம்மைக் காண விரும்புகின்றுர்" என்றுள். பவளேந்திரி 'இது ஒரு நன்மைக்குத்தான்' என்று எண்ணி "பெண்ணே! இது என்ன நகரம்? இந்நகரை யாளும் மன்னர் பெயர் யாது?" என்று வினவினுள். பாங்கி, "அரசே! இது சங்கபுரம்; இதனை ஆள்பவர் சங்குசீலர்; சிறந்த தருமகுணசீலர்" என்றுள். பவளேந்திரி சிவிகை யூர்ந்து அரசனிடம் வந்தாள். அதற்குள் பாங்கி மன்னனிடம் ஓடித் தொழுது, "தேவே! இதோ வருகின்ற சுந்தர புருஷரை நந்தவனத்தில் கண்டு நமது குழந்தை சந்திரரேகை காதல்கொண்டு இவரையே மணந்துகொள்வதாக உறுதி செய்தாள். தங்களுக்குத் தெரிவித்து விரைவில் திருமணத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு சொல்லச் சொன்னுள்" என்று விண்ணப்பித்தாள். மன்னன் வருகின்ற அரசகுமாரனை வரவேற்று, இரத்தினுசனந் தந்து உபசரித்தான். பவளேந்திரி மன்னனை வணங்கி ஆசனத்தில் அமர்ந்தாள்.

சங்குசீலன்: தாங்கள் யார்? தங்கள் பெயர் யாது?

பவளேந்திரி: அரசர் கோமானே! விந்தைபுர வேந்தராகிய வீரவர்மருடைய புதல்வன் யான். என் பெயர் பவளேந்திரன். வேட்டையாடிக் களைத்து நந்தவனத்தில் கண்ணயர்ந்தேன். என்னுடன் வந்தவர்களைக் காட்டிலே விட்டுப் பிரிந்தேன்.

சங்குசீலன்: அப்பா! மிக்க சந்தோஷம். என் அருந்தவப் புதல்வி சந்திரரேகை உன்னைக் கண்டு காதல் கொண்டிருக்கின்றாள். ஆதலால் தாங்கள் அவளை மணந்துகொண்டு இந்த அரசையும் ஆளவேண்டுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

பவளேந்திரி: (நமது கணவனைக் காண்பதற்கு இதுவும் ஒரு வழிதான் என்று எண்ணி,) தங்கள் கருத்தின் வண்ணம் நடக்கட்டும்.

சங்குசீலன் ஐம்பத்தாறு தேசத்தரசர்களுக்குந் திருமண வோலை அனுப்பினான். திருமண மண்டபம் அலங்கரித்தார்கள். அந்த ஊர் அமராவதிபோல் அணி செய்யப்பட்டது. பவளேந்திரி தனியே யிருந்து, "நமது கணவரும் பிறரும் இங்கு வரக்கூடும்; அங்ஙனம் வந்தால் அவர்களைக் கண்டுபிடிப்பதற்கு ஒரு வழி செய்ய வேண்டும்" என்று எண்ணி, சிறந்த படம் எழுதுபவனைத் தருவித்து, "ஓய்! நீ போய் அந்த அறையில் அங்கு ஒரு பெண் வருவாள்; அவளைப்போல் ஒரு பெரிய படம் எழுது" என்று கட்டளையிட்டாள். பின் தான் பழையபடி பெண்ணுடுப்பணிந்து அறைக்குள் சென்றாள். அவ்வோவியக்காரன் அவளைப்போல் சிறந்த படம் எழுதிக் கொடுத்தான். பவளேந்திரி அதைக் கோபுர வாசலில் கட்டி சில காவலரை வைத்து, "இந்தப் படத்தைப் பார்த்து வருகின்றவர்கள் ஏதாவது கூறினால், சிலர் அவரை அங்ஙனமே நிறுத்திவிட்டு சிலர் உடனே வந்து

அந்த வார்த்தையை எனக்குக் கூறுங்கள்'' என்று தக்க ஏற்பாடு செய்தாள்.

திருடன் பவளேந்திரியைத் தேடிக்கொண்டு, சங்க புரத்தில் அரசன் மகளுக்குத் திருமணம் என்று கேள் விப்பட்டு, அங்கு போனுல் நல்ல உணவும் ஏதாவது பண மும் கிடைக்குமென்று வந்துசேர்ந்தான். கோபுர வாச லில் கட்டியிருக்கும் படத்தைப் பார்த்து திகைத்து நின் ருன். ''அடி பவளம்! என்னை மேளதாளத்தோடு வரச் சொல்லிப்பிட்டு எங்கடி போயிட்டே? உன்னைத் தேடித் தேடி காலுந் தேஞ்சிப் போச்சே'' என்ருன். உடனே காவலர் ஓடி அவன் சொற்களைப் பவளேந்திரியிடம் தெரிவித்தார்கள். ''சரி சிறையிலிட்டு ஜாக்கிரதையாகக் காவல் புரியுங்கள்'' என்று கட்டளையிட, அவ்வண்ணமே செய்தார்கள். திருடன் சிறையிலிருந்து, ''அடசனியனே! அவள் படத்தைப் பார்த்து நின்றதற்குப் பலன் கிடைச் சுப்போச்சு; காத்தவராயசாமி தான் காப்பாத்தவேணும்'' என்று புலம்பிக்கொண்டிருந்தான்.

குந்தலராஜன் அங்குவந்து படத்தைப் பார்த்து, 'அடி பவளேந்திரி! என் ஆசையில் மண்ணைப் போட்டு விட்டு எங்கடீ போய்விட்டாய்? இந்த மோதிரத்தால் என் உயிர் நிலைபெற்றிருக்கின்றது?'' என்ருன். காவலர் அத னைப் பவளேந்திரியிடம் கூற, அவனையும் சிறையிலிடுவித் தாள். குந்தலன் சிறைக்குள் சிந்தாகுலத்துடன் இருந் தான்.

உத்தமசீலன், 'அம்மா தாயே! பவளேந்திரி' என்று தேடி யலைந்து, இங்கு வந்தால் காணலாமோ என்று கருதி வந்து சேர்ந்தான்; படத்தைப் பார்த்தான். அத னைத் தொழுது, ''அம்மா! அந்தப் பாவி மன்னன் செய்த சூழ்ச்சியால் நான் ஏமாந்தேன்; என் தாயே! தாங்கள் என்ன ஆனீரோ? எங்கு போனீரோ?'' என்று அழுதான்.

காவலர் அதைப் பவளேந்திரியிடம் தெரிவித்தார்கள். பவளேந்திரி கேட்டு, "காவலரே! அவரை மிக்க பணிவுடன் தனி மாளிகையில் இருத்தி ராஜோபசாரஞ்செய்து வாருங்கள். நான் சொல்லும்போது அழைத்து வர வேணும்" என்ருள். காவலர் அங்ஙனமே செய்தனர்.

தனபாலசெட்டி, பணத்தையும், உத்தமசீலனையும் இழந்து சந்திரரேகை திருமண விஷயத்தைத் தெரிந்து, அங்கு போனுல் நல்ல வியாபாரம் ஆகுமென்று அவனும் அங்கு வந்து சேர்ந்தான்.

சுந்தரதர்மன் பரதேசியைப்போல் நாடு, நகரம், காடு, மலை யெல்லாம் தேடி இங்கு திருமணம் என்றறிந்து இங்குற்ருல் காணலாமோ என்று கருதி வந்தான். கோபுர வாசலிலுள்ள படத்தைக் கண்டு, "என் பவளேந்திரி படம் இங்கு எப்படி வந்தது? பெண்ணரசே! தூக்கம் என்னைக் கெடுத்துவிட்டது. தூக்கம் துக்கத்தைத் தந்தது. என்னைக் குதிரையுடன் வரச் சொன்னுயே; நீ எங்கு போனுயோ? உன்னை நான் மீண்டுங் காண்பேனு?' என்று புலம்பினுன். காவலர் அதனைப் பவளேந்திரிக்குக் கூற, தக்கவர்களை யனுப்பி அவனையும் சிறந்த இடத்தில் உயர்ந்த உபசாரத்துடன் இருத்தி வைத்தாள்.

யூகி, மதியூகி என்பவர், "இனி நாம் இப்படி அலையக் கூடாது; சங்கபுரத்தில் அரசகுமாரிக்குத் திருமணமாம். அங்கு நமது தந்தை ஒருவேளை வந்தாலும் வருவார்; அவருடன் நமது ராஜ்யத்திற்குப் போவோம்" என்று எண்ணி சங்கபுரம் வந்து படத்தைக் கண்டார்கள். "ஆகா! நம்மை ஏமாற்றிய பெண்ணின் படம் இது; அம்மா! நாங்கள் செய்த குற்றத்திற்கு உன்னிடம் மன்னிப்பு கேட்டுக்கொள்கின்ருேம்" என்ருர்கள். அதனைக் காவலர்கள் பவளேந்திரியிடம் கூற, அவர்களையுந் தக்க உபசாரத்துடன் வேறு இடத்தில் இருக்க வைத்தாள்.

அநேக புரவலர்களும். புலவர்களும், வந்தியரும், மாகதரும், வேதியரும், யாசகரும், கூத்தரும் வந்து சங்க புரத்தில் குழுமினுர்கள். எள்ளிட இடமின்றி எங்கும் ஒரே கூட்டம். ஆங்காங்கு போஜனசாலை; பிரசங்கம்; சதிர்; விகடம்; இப்படி அந்நகரம் கோலாகலமாக இருந்தது. திருமண நாள் காலை சந்திரரேகையை நன்கு அலங்கரித்தார்கள். பவளேந்திரியுஞ் சிறந்த ஆடைகளையும் மணி மகுடமுந் தரித்து தேவகுமாரனைப்போல் விளங்கினுள். சகல விருதுகளுடனும் வரிசையுடனும் பவளேந்திரனை அழைத்துவந்து மணமண்டபத்தில் உயர்ந்த ஆசனத்திலே அமர்த்தினுர்கள். பின்னர் சந்திரரேகையையும் முத்துப் பல்லக்கில் அழைத்து வந்து பவளேந்திரன் அருகில் இருக்க வைத்தார்கள். அரசர்கள் அனைவரும் தத்தம் ஆசனங்களில் வீற்றிருந்தார்கள். அந்தச் சபை தேவசபைபோல் பொலிவுற்றது. பவளேந்திரன் உத்தரவுப்படி சிறையிலடைத்த இருவரையும், உபசரித்து வைத்த நால்வரையும் அழைத்து வந்து நிறுத்தினர். "இனி திருமணம் நடக்கலாம்" என்று சங்குசேல மன்னன் கூறினுன்.

பூகியும், மதிபூகியும் அங்கு அரசர்களுக்கு நடுவேயுள்ள வீரவர்மன் பாதத்தில் விழுந்து, "அப்பா!" என்று அலறினுர்கள். வீரவர்மன் சிறுபருவத்தில் விட்டுப் பிரிந்த தன் மக்களைக் கண்டு அதிசயமும், துன்பமும் இன்பமும், ஒருங்கே யெய்தி பிள்ளைகளை யெடுத்துத் தழுவி மகிழ்ந்தான். அதைக் கண்ட பவளேந்திரி அவர்களைத் தன் தமையன்மார்கள் என்றுணர்ந்து உள்ளங் குளிர்ந்தாள். "நான் இவர்களுடைய உடுப்பை யுடுத்து இங்கு வந்தேன். அயல் ஆடவர் உடையை யுடுப்பது கற்புக்குப் பழுதாயிற்றே என்று கருதினேன். இப்போது

நான் உடுத்தது நமது உடன் பிறந்தார் உடுப்பென உணர்ந்தேன். குற்றமில்லை'' என்று மகிழ்ந்தாள்.

உத்தமசீலன் அக்குழுவில் உள்ள தன் தந்தை பத்ம சேகர மன்னனைப் பார்த்து ஓடி அவர் கால்மேல் விழுந்து அழுதான். நீண்டநாளாகக் காணாத மகனைக் கண்டு பத்ம சேகரனும் அணைத்து ஆனந்தமுற்றான். தனபாலசெட்டி உத்தமசீலனைப் பார்த்து, "அப்பா! நீ பத்மசேகர மன்னனுடைய புதல்வனா? இனி என் பணத்திற்குப் பய மில்லை'' என்றான். அப்போதும் அவனுக்குப் பணத்தி லேயே குறி. அதையும் பவளேந்திரி கண்டு களித்தாள்.

பவளேந்திரி: (பரதேசியாக நின்ற சுந்தரதர்மனை யழைத்து) நீ யார்? அந்தப் படத்தைப் பார்த்து என்ன சொன்னாய்? பலரும் அறியச் சொல்.

சுந்தர தர்மன்: அரசே! சபையோர்களே! விதர்ப்ப நாடாளும், சுந்தர தர்மன் என்ற அரசன் நான். இதோ இருக்கின்ற விந்தைபுர வீரவர்மர் மகள் பவளேந்திரியை மணந்தேன். பாவியாகிய நான்வேசி லோலனாகி என் கற்புக்கரசியாகிய பவளேந்திரி யைக் காவலில் வைத்தேன். புத்திர பாக்கியத்தை விரும்பி என் மனைவியிடம் நான் வருவதாகச் சொல்லுமாறு சேர்வைக்காரனை அனுப்பினேன். அந்தப் பாவி என் மனைவி என்னை வைவதாகக் கோள் சொல்லி என் குடியைக் கெடுத்தான். நான் கோபமுற்ற பவளேந்திரியை ஏலம்போடச் சொன் னேன். பிறகு மந்திரியின் நீதிமொழியால் நான் திருந்தி இந்த வேடத்துடன் வந்து குந்தலதேயத் தில் என் மனைவியைக் கண்டேன்; அவள் சொல்லிய படி இரவு குதிரையுடன் சென்றேன். சற்று தூங்கி விட்டேன். பிறகு எழுந்து என் மனைவியைக் காணாது தேடி இங்கு வந்தேன்.

பவளேந்திரி: "சரி இரும்" என்று கூறி உத்தமசீலனைப் பார்த்து "உன் வரலாற்றைக் கூறு" என்று கட்டளை யிட்டாள்.

உத்தமசீலன்: அரசரேறே! சபையோர்களே! அடியேன் பத்மசேகரருடைய பாலன். இளம் பருவத்தில் பிதாவை விட்டு தேசசஞ்சாரம் செய்து வந்து இங் குள்ள தனபாலசெட்டியிடம் இருந்தேன். இவர் இரத் தினம் வாங்க நூருயிரம் பொன் கொடுத்து என்னை யனுப்பினார்; நான் குந்தலதேசம் வந்தேன். அங்கு பவளேந்திரி யம்மையாரை ஏலம் போடக் கண்டு என் மனம் வருந்தியது. என்னைக் கண்டு சேர்வைக் காரன் அவமதித்தான். நான் நூருயிரம் பொன் னைத் தந்து அந்த அம்மாவை ஏலத்தில் எடுத்தேன். பிறகு அந்த அம்மையின் வரலாற்றைத் தெரிந்து என் தாயாக எண்ணித் தொழுதேன். அந்த அம்மா தன் கணையாழியை விற்று தனபாலசெட்டியின் கட னைத் தீர்க்கச்சொன்னார். நான் இந்தக் குந்தலனிடம் விற்கப் போனேன். இவன் 'மோதிரத்திற்குரியாரைக் கூட்டி வரவேண்டும்; இல்லையேல் நீ கள்ளன் என்று உன்னைத் தண்டிப்பேன்' என்ருன். இந்தப் பாவி செய்த மோசமோ யாதோ, என் தாய் பவளேந்திரி யைச் சத்திரத்தில் காணவில்லை. பிறகு ஊர் ஊரா கத் தேடி இங்கு வந்து என் தந்தையைக் கண்டேன்.

பவளேந்திரி: சரி; ஓய்! நீ யார்? உன் வரலாறு யாது? ஒளியாமல் கூறு. இல்லையேல் உன் தலை நிலைபெருது.

குந்தலன்: அரசர் பெருமானே! நான் குந்தலராஜன். சுந்தரதர்மருடைய சேவகன் சேர்வைக்காரன் என் னிடம் வந்து பவளேந்திரியினுடைய அழகைக் கூறி என்னை மோசஞ் செய்யச் சொன்ஞன். நான் புத்தி கெட்டுப்போய் சேவகரை விடுத்து சத்திரத்திலிருந்த

பவளேந்திரியை என் சிங்கார மாளிகையில் வைத்து உத்தமசீலனை ஏமாற்றிவிட்டேன். பிறகு பவளேந் திரி முப்பதுநாள் விரதமென்ருள். முப்பதாம் நாள் இரவு எங்கோ போய்விட்டாள்; மதிகெட்ட மடை யனுகி நான் அவளைத் தேடி யலைந்து இங்குவந்தேன்.

பவளேந்திரி: சரி, அப்படி நில்; (திருடனைப் பார்த்து) நீ யார்? கூறு.

திருடன். மவராஜா! நான் திருடன். குந்தல நகரில் திருடப் போனேனுங்க. அங்க குதிரை நிண்ணதுங்க. பவளம் வந்ததுங்க. கூட்டிக்கினு போனேனுங்க. அப்பரம் என்னைப் போயி மேளதாளம் கூட்டியார அனுப்பிச்சுதுங்க. நான் போய் வந்து பார்த்தேன். பவளம் எங்கேயோ போயிட்டதுங்க. அதைத் தேடிக்கினு, இங்கே வந்தேனுங்க. என்னைப் பிடிச்சு அடைச்சுட்டாங்க.

பவளேந்திரி: சரி அப்படி நில். (யூகி, மதியூகியைப் பார்த்து) உங்கள் வரலாற்றைக் கூறுங்கள்.

யூகி மதியூகி: அரசே! நாங்கள் விந்தைபுர வீரவர்மர் புதல்வர்கள். பிதாவிடத்தில் மன வருத்தப்பட்டு இளமையில் அவரைப் பிரிந்து பல தேசங்கள் போய்ப் பார்த்துவிட்டு சுந்தரதர்மரிடம் பிரதானிகளாக இருந் தோம். அவருடைய அநீதியைக் கண்டு வெறுத்து விலகினேம். பின்னர் காட்டில் ஒரு பெண்ணைக் கண்டு மயங்கினேம். அவள் உடுப்பையும் வில்லம் பையும் களைந்து வைக்கச் சொன்னுள். அங்ஙனமே நாங்கள் செய்தோம். அவள் அம்பை விட்டு 'அதை யார் முன்னுடி எடுத்து வருகின்றீரோ அவரை நான் விரும்புவேன்' என்ருள். நாங்கள் ஓடி எடுத்து வரு வதற்குள் அப் பெண்ணரசையும் எங்கள் உடுப்பை யுங் காணவில்லை. எமது பிழையை உணர்ந்து அந்த

அம்மையிடம் எங்கள் பிழைக்கு மன்னிப்பு கேட்க வேண்டுமென்றும், மாதா பிதாவைக் காணலாமென் றும் இங்கு வந்தோம்.

பவளேந்திரி: சரி, "பெரியோர்களே! இனி நான் கூறும் வசனங்களைச் சற்று கவனமாகக் கேளுங்கள். விந்தை புர மன்னருடைய மகள் பவளேந்திரி, இதோ இருக் கின்ற விதர்ப்ப மன்னரை மணந்துகொண்டாள். இவர் வேசி வலைப்பட்டு சேர்வைக்காரன் பொய் மொழியாலும், வேசியின் வீணுரையாலும் மதிமயங்கி மனைவியை ஏலம்போடச் செய்தார். உத்தமசீலன் என்னும் இவர் ஏலத்தில் எடுத்தார். தாயாக எண்ணி வணங்கினார். பவளேந்திரி தன் மோதிரத் தைக் கொடுத்து குந்தல மன்னனிடம் விற்று தன பாலச் செட்டியின் கடனைத் தரச் சொன்னாள். குந்தலன் சதி செய்து பவளேந்திரியை வசஞ் செய்து கொள்ள சிங்கார மாளிகையில் காவலில் வைத் தான். பவளேந்திரி தன் கற்பைக் காப்பாற்றும் பொருட்டு முப்பது நாள் விரதமென்று கூறி முருக வேளைப் பூசித்து வந்தாள். முப்பதாவது நாள் தன் கணவன் யாசகனைப்போல் வர, அதனை யுணர்ந்து, இரவு பதினைந்து நாழிகைக்குக் குதிரையுடன் வரு மாறு சொன்னாள். அவர் வந்து கண்ணயர்ந்து விட, இத் திருடன் அங்கு திருடும் பொருட்டு வந்து சேர்ந் தான். பவளேந்திரி இவனைக் கணவன் என் றெண்ணி இவனுடன் குதிரை யேறிச் சென்றாள். பிறகு திருடன் என்று தெரிந்து மேளதாளத்துடன் வந்து அழைத்துப் போகுமாறு ஏமாற்றி அனுப்பிவிட்டு காட்டில் புகுந்து ஒரு முனிவருக்குத் தொண்டு புரிந் திருந்தாள். தண்ணீர் எடுக்கப்போன இடத்தில் இந்த பூகியும், மதிபூகியும் பவளேந்திரியைத் தங்கை

யென்று கூட உணராமல் மோகித்தனர். பவளேந்திரி இவர்கள் உடுப்பை அவிழ்த்துவைக்கச் செய்து அம்பை எடுத்து அதை விடுத்து அதை முன்னடி எடுத்து வருபவனை விரும்புவதாகச்சொல்லி அம்பு தொடுத்தாள். அதை எடுக்க இவர்கள் ஓடினார்கள். பிறகு பவளேந்திரி அந்த ஆண் உடையை யுடுத்து நடந்தாள். எதிரில் சேர்வைக்காரன் எதிர்ப்பட அவனை அம்புவிட்டுக் கொன்றனள். பின்னர் இந்நகர நந்த வனத்தில் வந்து கண்ணயர்ந்தனள். அவள் ஆணுரு விலிருந்ததனால் அவளைக் கண்டு இதோ என் அருகிலிருக்கும் சந்திரரேகை காதல் கொண்டனள். அவள் பவளேந்திரன் என்று சங்குசீல மன்னரிடம் உரைத்து இந்த சபையைக் கூட்டினாள். பிறகு தன் படமெழுதி கோபுரவாசலில் கட்டி இவர்களை யெல் லாம் கண்டுபிடித்தாள். இப்போது இத்தனை பேரும் தேடிய பவளேந்திரி எங்கிருக்கின்றாள் என்று தெரிந்து கொள்ளுங்கள்'' என்று தன் சரித்திரத்தைச் சுருக்க மாகச் சொல்லி முடித்தாள்.

ஆணுருவத்துடன் மணமகனாக அமர்ந்திருந்தவளே பவளேந்திரி யென்றுணர்ந்த சபையில் பெரும் குதூகல மும் ஆரவாரமும் உண்டாயிற்று. உடனே பவளேந்திரி ஆண் உடையைக் களைந்து பெண்ணுருவத்துடன் நின் றாள். வீரவர்மன் மகளைப் பார்த்து, 'மகளே' என்று அழு தார். சுந்தரதர்மன் 'என் காதலீ' என்றழுதான். உத்தம சீலன் 'என்தாயே' என்றழுதான். யூகியும், மதியூகியும் 'தங்காய்' என்றழுதார்கள். பவளேந்திரி பிதாவைத் தொழுது, தன் கணவன் கால்மேல் வீழ்ந்து, 'உங்களைப் பரதேசியாக அலையச்செய்த பாவியானேன்' என்று அழு தாள். சுந்தரதர்மன் மனைவியை எடுத்து அணைத்து, 'என் கண்ணே! உன்னை இத்துணைத் துயரத்திற்கும் ஆளாக்கி

யது நானல்லவா? என்னாலல்லவா இந்த இடர் உனக்கு எய்தியது. பாவியாகிய என்னை உன் கற்பு ஏற்றுக் கொண்டதே' என்று அழுதான்.

பிறகு பவளேந்திரி கால்மேல் வீழ்ந்து, 'என்னைக் காப்பாத்துங்க' என்று திருடன் அழுதான். குந்தல மன்னன் 'என்னை மன்னியுங்கள்' என்று கைகூப்பினான்.

பவளேந்திரி திருடனுக்கு நல்லுரை பகன்று, 'இனி இந்த திருட்டுத் தொழிலை விடுத்து, இந்த சமஸ்தானத்தில் சேவகனாக இரு' என்று அவனைச் சேவகனாக அமர்த்தினாள். மோசக்கருத்து மிகுந்த குந்தலனை ஆயுள் உள்ள வரை சிறைத் தண்டனை விதித்தாள். தன் கணவனைக் கொண்டு தனபால செட்டிக்கு நூறுயிரம் பொன்னைத் தரச்செய்தாள். இனி, "பெரியோர்களே! என்னைக் காதலித்த சந்திரரேகையை என் மகன் உத்தமசீலனுக்கு மனைவியாக்குகிறேன்" என்றாள். எல்லோரும் 'சந்தோஷம்' என்று ஆரவாரித்தனர். அதே மணமண்டபத்தில் அந்த லக்கினத்திலேயே சந்திரரேகைக்கும் உத்தமசீலனுக்கும் திருமணம் இனிது நடந்தது.

பவளேந்திரி, தந்தை, தமையன்மார், சங்குசீலன், உத்தமசீலன், சந்திரரேகை, ஆகிய எல்லோரிடத்திலும் விடைபெற்று தன் கணவனுடன் பொற்றேரூர்ந்து விதர்ப்ப தேயஞ் சேர்ந்தாள். பவளேந்திரியுடன் பார்த்திபன் இனிது சேர்ந்தது குறித்து மந்திரியும் நகர ஜனங்களும் மட்டற்ற மகிழ்ச்சியுற்றார்கள். மன்னன் மோகனனைப் பலருமறியக் கழுவிலேற்றி விட்டான்.

பவளேந்திரி பரம பதிவிரதா தருமத்துடன் பதியுடன் பல்லாண்டு வாழ்ந்து நன்மக்களைப் பெற்று இன்புற்று வாழ்ந்தனள்.

# தனிகைநாயகி

"பெண்ணே! எம்பெருமான் கருணையால் நமக்கு எல்லா பாக்யங்களும் நிறைந்திருக்கின்றன, ஆனால் சிறந்த பாக்கியமாகிய புத்திரப்பேறு மட்டும் இல்லை. நம்முடைய செவி மழலைமொழியைக் கேளாது வாடுகின்றது. எனக்குப்பின் இந்த சாம்ராஜ்யத்தை ஆள்வதற்கு நாதனில்லையே; நாதனின்றி பூதலம் நடுங்குமே. கந்தப்பெருமான் கருணை எப்போது துணைபுரியுமோ? புலவனில்லாத சபைபோலும், அறிவின்மிக்க அமைச்சனில்லாத அரசாங்கம் போலும், உறுதியில்லாதவன் தவம் ்பாலும், வீரமில்லாத சேனைகள் போலும், மகப்பேறில்லாத நமது குலம் பொலிவு இன்றி தளர்கின்றது" என்று சுதர்ம நாட்டு மன்னனாகிய சுகுணன் தன் மனைவியிடம் கூறி வருந்தினான். மன்னன் மனைவி கணவனைத் தொழுது, "ஆர்வலரே! நமது முதன் மந்திரி ரேகைசாஸ்திரத்தில் வல்லவர் என்று கேள்வி; அவருடன் மகப்பேறு குறித்து ஆராய்ந்துபாரும்" என்றாள்.

சுகுணவேந்தன் சிறந்த பராக்கிரமசாலி; நாட்டை நலம்பெற ஆண்டுவந்தான். அம்மன்னனுடைய மூத்த மந்திரி மதிநலம் படைத்தவர். "உற்றதுகொண்டு மேல்

வந்து உறுபொருள் உரைக்கும்" பெற்றியர். அரசாங்க மாகிய தேருக்கு அச்சாணிபோன்றவர். அதிநுட்பமான மதிநுட்டம் உடையவர்: அவர் பேர் "ஞானசேகரர்". அவர் ரேகை சாத்திரத்தில் நிபுணர்.

சுகுணவேந்தன் ஞானசேகரரை யழைத்து, தனது அந்தப்புரத்தில் இருத்தி, "அன்புள்ள அமைச்சரே! எனக் குப்பின் நல்ல அரசனையின்றி உலகம் வருந்துமே யென்று என் மனம் வருந்துகின்றது. மகப்பேறில்லாத மனைவாழ் வில் மாண்பு இல்லை. என் மனக்கவலை தீர்க்கு மருந்தாக உம்மை மதிக்கின்றேன்" என்றான். ஞானசேகரர் "வேந்தே! எல்லாம் எம்பெருமான் கருணையின்படியே நடக்கும்.

"தனக்குவமை யில்லாத் தணிகையிறை நோன்றாள்
மனக்கவலை தீர்க்கும் மருந்து"

என்று பெரியோர்கள் கூறுவர்" என்று மந்திரி மன்னனு டைய கைரேகையையும் அரசமா தேவியின் கைரேகை யையும் நன்கு பார்த்து ஆராய்ந்தார். மன்னனைநோக்கி, "வேந்தர் வேந்தே! தங்கட்கு முருகனருளால் மகப்பேறு கிடைக்கும்; ஆனால் பெண்மகவு தான் பிறக்கும். அதனை வளர்த்து மகிழும் பேறு தங்கட்கு இராது" என்றார். சுகுணன் "மந்திரீ! பெண்மகவு பிறந்தால் என்ன? தாய் தந்தையரிடம் ஆண்மக்களைவிடப் பெண்மக்களுக்கே அன்பும் ஆதரவும் அதிகம். அசுவசேனன் சாவித்திரியைப் பெற்றதால் பெருமை யடையவில்லையா? சீதையைப் பெற்ற சனகன் அழியாத புகழைப் பெற்றனன். ஆதலின் அதுபற்றி எனக்கு அதிக மகிழ்ச்சி. ஆணோ? பெண்ணோ? ஒரு குழந்தை பிறந்தால் போதும். மலடன் என்ற பழிச் சொல் நீங்குமல்லவா?" என்றான். ஞானசேகரர் "மன்னர் பெருமானே! தாங்கள் பண்டுசெய்தவினை மகப்பேற்றினைத் தடுக்கின்றது. வினைகள் தணியும் இடம் திருத்தணிகை.

அம் மலைமேவும் செம்மலைத் தெரிசிக்கவேண்டும். அம் மலைப்படியில் ஏறுந்தொறும் ஏறுந்தொறும் வினைகள் இறங்கும். தன்னை யடைந்தார் வினைகளைத் தணியச் செய்வதால் அம் மாமலைக்குத் தணிகைமலை யென்று பேர். தாங்கள் அம்மாவுடன் திங்கள்தோறும் சஷ்டியில் சென்று, சரவணப் பொய்கையில் முழுகி, தணிகைமலைமேவுந் தயாபரனை வழிபாடு செய்யும். அக்கருணைமூர்த்தியின் திருவருளால் நிச்சயமாகத் தங்கட்குச் சந்தானம் கிடைக்கும். தங்கள் மனக்கவலை தீரும்'' என்று கூறினர். சுகுணவேந்தன் அதற்கு இசைந்தான்.

சுகுணமன்னன், தன்வாழ்க்கைத் துணைவியுடன் நியமந் தவருமல், ஒவ்வொரு மாதமும், வளர்பிறை சஷ்டியன்று, திருத்தணிகை சென்று, முறைப்படி சரவணப் பொய்கையில் முழுகி, மலையேறி, எம்பிரானுக்கு அபிஷேக ஆராதனை செய்வித்து வழிபடுவான்.

''ஆவிக்கு மோசம் வருமாறறிந்துன் அருட்பதங்கள்
சேவிக்க என்றும் நினைக்கின்றிலேன் வினைதீர்த்தருளாய்
வாவித் தடவயல் சூழுந் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே அமர சிகாமணியே''

என்று துதிப்பான்.

திருத்தணியாண்டவர் கருணையால் மன்னன் மனைவி கருவுற்றுள். கரு வளர வளர மன்னன் மகிழ்ச்சி வளர்ந்தது. நல்லதொருநாளில் பாற்கடலில் பங்கயமடந்தை பிறந்தது போல் ஒரு பெண்மகவு பிறந்தது. மன்னன் பெருமகிழ்ச்சி யடைந்தான். சிறைச்சாலையைத் திறந்து சிறையில் இருந்தவர்கட்கு விடுதலையளித்தான். அன்னதானமும் சொன்ன தானமும் அளவில்லாமல் வழங்கினன். மூன்று ஆண்டுகள் சிற்றரசர்கள் கப்பங் கட்டவேண்டாம் என்றும் மக்கள் வரிசெலுத்த வேண்டாம் என்றும், பறைசாற்றச் செய்தான். ஊரெங்கும் கொண்டாட்டம். சுதர்மநாட்டில் உள்ள

குடிகள் எல்லோருக்குந் தங்கள் தங்கள் வீட்டில் குழந்தை பிறந்ததுபோல், எல்லையில்லாத சந்தோஷம். தேவாலயங்களில் விசேட வழிபாடுகள் நிகழ்ந்தன. மன்னன் வேண்டியவர்கள் செம்பொன்னை அள்ளிக்கொண்டு போகுமாறு கருவூலத்தை மூன்று நாள் திறந்துவிட்டான். பன்னிரண்டாவதுநாள் தங்கத்தொட்டிலில் குழந்தையைத் தாலாட்டினுர்கள். முதல் மந்திரியின் சொற்படி குழந்தைக்குத் தணிகைநாயகி என்று பேரிட்டனர்.

குழந்தை பிறந்து மூன்று மாதங்கள் கடந்தன. சுகுண வேந்தனிடம் பகைமை கொண்ட வேந்தர் பலர். தனித் தனியே வந்து போரிட்டுத் தோல்வியுற்ற அவர்கள் அனைவரும் ஒருங்குகூடி முன் எச்சரிக்கையின்றி திடீர் என்று கோட்டையைச் சுற்றி வளைத்து செருப்பறை முழக்கினர். சுகுணன் அதுகேட்டுப் பெருஞ்சினங் கொண்டான். மலைக்குகையில் இருந்த சிங்கம் கொதித்து எழுவதுபோல் எழுந்தான். தனது நால்வகைப் படைகளையும் ஆயத்தம் செய்துகொண்டு போருக்குப் புறப்பட்டான். இருதிறத்துச் சேனைகளும் கைகலந்து போரிட்டனர். யானைப்படை யானைப்படையுடனும், குதிரைப்படை குதிரைப்படையுடனும், தேர்ப்படை தேர்ப்படையுடனும், காலாட்படை காலாட்படையுடனும் எதிர்த்து, சங்குல யுத்தம் நிகழ்ந்தது. ஒருவாரமாக கடுமையான போர். வெற்றி யார் பங்கு என்று விளங்கவில்லை.

நடு இரவு; எங்கும் இருள். போர்வீரர்கள் தங்கள் உடம்பில் உண்டாகிய வீரப்புண்களுக்கு மருந்திட்டுக் கொண்டிருக்கின்றனர். மன்னன் மிகுந்த ஆழ்ந்த சிந்தனையுடன் படுக்கையில் சாய்ந்திருக்கின்றனன். அடிமேல் அடிவைத்து யாரோ வரும் ஓசை கேட்டது. மன்னன் எழுந்து "யார் அங்கே?" என்று வினவினுன்.

மந்திரி "அரசே! அடியேன் ஞானசேகரன். வணக்கம். தங்களிடம் அந்தரங்கமான ஒரு விஷயத்தைப்பற்றி ஆலோசிக்க வந்தேன். கருணை நிறைந்த காவலரே! போர் மிகவும் கடுமையாக நடந்து வருகிறது. நமக்குக் காலபலமில்லை யென்று நான் கருதுகின்றேன். அன்றியும் நமது செல்வக் குழந்தை தணிகைநாயகியின் கைரேகையைக் கவனித்துப் பார்த்தேன். மாதா பிதாக்களுக்கு ஆபத்தும் நாடு நகரங்களுக்குக் கேடும் வரும் என்றும் தெரிகின்றது. ஒருவேளை நமக்குத் தோல்வி வருமானால், குழந்தைக்கும் அரசிக்கும் துன்பம் நேரும். ஆனபடியால் குழந்தையுடன் அரசியை தகுந்த பாதுகாப்போடு தாயார் வீட்டுக்கு அனுப்பிவைப்பது நலம்" என்றான். மன்னனும் அதற்கு இணங்கினான். மறுநாள் இரவு மன்னன் மனைவி பாற்சென்று "பெண்ணரசே! போர் கடுமையாக நடந்து வருகின்றது. வெற்றி யார் பக்கம் வருமோ? ஒருவேளை நமக்குத்தோல்வி யெய்துமாயின் குழந்தைக்கும் உனக்கும் ஆபத்து நேரும். ஆனபடியால் நீ குழந்தையுடன் உன் தாய் வீட்டிலே போய் இரு. வெற்றி பெற்றவுடன் மீண்டும் உன்னை அழைத்துக் கொள்வேன்" என்றான்.

அரசி மனம் நடுங்கி கணவன் கால்மீது வீழ்ந்து வணங்கி "பிராணபதீ! இந்த வேளையில் நான் தங்களை விட்டு எவ்வாறு பிரிவேன்? நினைக்கும்போதே உள்ளம் பதறுகின்றதே. வேண்டாம். தங்கள் அருகிலேயே இருப்பேன். என்ன துன்பம் வந்தாலும் வரட்டும்" என்று கூறினாள். சுகுணன் "கண்ணே! என் வார்த்தையைத் தட்டாதே. நான் நீள நினைந்து கூறுகின்றேன். உனக்கும் எனக்கும் என்ன ஆபத்துவந்தாலும் பாதகமில்லை. பழுத்த ஓலைகள் உதிர்வதால் என்ன நஷ்டம். நமது அருந்தவப் பயனால் அவதரித்த, குலக்கொழுந்து—அழகின் இளந்தளிர் தணிகைநாயகிக்கு ஆபத்து வரக்கூடாது. அவள் நலனைக்

கருதி நீ உன் பிதா வீடு சேர்வாய். அமைச்சரும் அது படியே கருதுகின்றார்” என்றான். அரசி ஒருவாறு இணங்கினாள். மன்னன் மனைவியைத் தழுவி விடைதந்தான். தன் அன்பின் கருவூலமாகிய தணிகைநாயகியை எடுத்து உச்சிமோந்து முத்தமிட்டு முகத்தோடு முகஞ்சேர்த்து, இன்பக்கடலில் முழுகி, மனைவியின் கரத்தில் உயிரைத் தருவதுபோல் தந்தான்.

எங்கும் நிசப்தம்; காரிருள். நிலமகள் உறங்குவது போல் அமைதியாக இருக்கின்றாள். அந்த வேளையில், பல்லக்கிலே தன் அருமந்தச் செல்வியுடன் அரசமாதேவி புறப்பட்டுச் செல்கின்றாள்; தோழிகளும்; மெய்காவல்களும் உடன் செல்லுகின்றனர். “கொய்” என்று ஒரு சத்தம். ஊமைக் கோட்டான்கள் பயங்கரமாகக் கூவுகின்றன. ஆந்தைகள் ஒருபுறம் கூவி அச்சத்தை விளைவிக்கின்றன. அரவங் குறுக்கிட்டது. அரசிக்கு வலத்தோளும் வலக்கண்ணுந் துடித்தன. அவள் மனம் பெருங்கவலையால் கலங்கியது. இரண்டு காதங் கடந்தனர். வழி பறிக்குங் கொடியவரான வேடர், கூட்டமாக வந்து சூழ்ந்து கொண்டனர். மெய்காவலருக்கும் வேடர்களுக்கும் கைகலப்பு நடந்தது. முடிவில் வேடர்கள் மெய்காவலரைக் கொன்று, பல்லக்கிலிருந்த அரசமாதேவியையுங் கொன்று, பாங்கியரையுங் கொன்று அவர்கள் மீதிருந்த ஆடையாபரணங்களை யெல்லாம் கவர்ந்துகொண்டு சென்றனர். அரசியின் முடிவு பரிதாபமாக முடிந்தது.

மறுநாள் காலையில் இரு திறத்துச் சேனைகளும் போர் தொடங்கின. சுகுணமன்னனுடைய சேனை இளைத்தது. அதுகண்ட மன்னன் தன் சேனை வீரர்களை நோக்கி, உரைப்பான்: “வீரர்களே! வள்ளலாய் வழங்குபவர்க்குப் பொன் துரும்பு. புலவனுக்குச் சபை துரும்பு; மாலுமிக்குக் கடல் வழிச் செலவு துரும்பு; துறவிக்கு வேந்தன்

துரும்பு; வீரருக்கு உயிர் துரும்பு. ஆதலால் நீங்கள் பின் வாங்கக்கூடாது. மனிதனுக்கு எத்தனைகாலம் இருந்தாலும் ஒரு நாளைக்கு மரணம் வந்தே தீரும்; ஆறிலும் மரணம்; நூறிலும் மரணம். மரணமின்றி வாழ்ந்தவர் இல்லை. மநு, மாந்தாதா, இக்ஷுவாகு, திலீபன், இரணியன், துஷ்யந்தன், யயாதி, பரதன், அசோகன், முதலிய எல்லோரும் இறந்துவிட்டனர் என்றே கேள்விப்படுகின்றோம். வெண்கல சரீரம் படைத்த கோரக்கு மாண்டான்; வஜ்ர சரீரம் படைத்த சூரபன்மன் எங்கே? உலகில் நிலைத்து நிற்பது புகழ் ஒன்றே. நம்முடைய தேசத்திற்காக உயிரையும் தியாகஞ் செய்யவேண்டும். இந்த பூதவுடம்பு நெருப்பில் வெந்தழியும். புகழுடம்பு ஒரு போதும் அழியாது. வீர அபிமன்யு போரில் ஒரு தேர் ஒரு வில் ஒரு சாரதியுடன் சென்று, துணை தேடாமல் உறுதியுடன் நின்று போர் புரிந்தான். துரோணர், அசுவத்தாமா, கிருபர், கர்ணன், ஜயத்ரதன், பூரிசிரவா முதலிய பலப்பல சிறந்த வீரர்கள் கோடிக்கணக்கில் எதிர்த்தனர். அவர்கள் அத்தனைபேரையும், இளைஞனாகிய அபிமன்யு ஒருவனே எதிர்த்து அஞ்சாநெஞ்சுடன் போர் புரிந்தான். பலரைக் கொன்றான். பலரை வென்றான். இறுதியில் நியாயமல்லாத முறையில் மூர்ச்சித்திருக்கும் போது கொல்லப்பட்டான். அவன் உடம்பு அழிந்தது. புகழ் இமயமலை போல் அழியாது நிற்கின்றது. ஆனபடியால் பகைவருக்கு இளைக்கக் கூடாது. புயவலியைக் காட்டிலும் மனவலியே சாலச்சிறந்தது. இறுதிவரை உறுதி இருக்கவேண்டும். புகழைக் கரும்பாகவும், வாழ்வைத் துரும்பாகவும் நினையுங்கள். கற்றூண் பாரம் மிகுதியாயின் பிளக்குமே யன்றி வளையாது. அதுபோல் பகைவர்கள் கையில் உயிர் கொடுக்க வேண்டுமேயன்றி புறங்கொடுக்கக் கூடாது. நீங்கள் அனைவரும் ஆண்சிங்கங்களைப்போல வீறு கொண்டு நில்லுங்கள். சிங்கம் யானைகளைக் கொல்லு

வதுபோல் பகைவரைக் கொல்லுங்கள். தேசத்திற்காக உயிர் வழங்கி இறந்தவன் என்றைக்கும் இருந்தவனே யாவான். புறமுதுகிட்டு ஓடி ஒளிந்த ஒருவன் தேசத்துரோகி; இராஜத்துரோகி; அவன் இருந்தும் இறந்தவனே யாவான். ஆனபடியால் ஓடி ஒளிந்து உயிர் வாழக் கூடாது. நீங்கள் அனைவரும் ஒன்று பட்டு ஊக்கத்துடன் போர் புரியுங்கள். வெற்றி நம்பால் எய்தும்'' என்று அரசன் வீரப்பிரசங்கம் நிகழ்த்தினான். போர் வீரர்கள் அனைவருக்கும் ஊக்கம் பிறந்தது. எவ்வாறு வெல்வது என்ற ஏக்கம் இறந்தது. சுகுணன் தன் மணித்தேரின் மீது ஏறி முன்னணியில் நின்றான்.

சுகுணனுடைய வீரப்பிரசங்கத்தைக் கேட்ட சேனைக்கு வீரவுணர்ச்சி பிறந்தது. மன எழுச்சியும், போரில் ஊக்கமும் உண்டாயின. துண்ணென்று எழுந்தது. ஒவ்வொருவரும் இரும்புத் தூண்களைப் போலே தளராது நின்று போரிடுவாராயினார்கள். போர் மிகவும் திறமையாக நடந்தது. எதிரிகள் படை அயர்ந்தது. சுகுணனுடைய வீரம் உயர்ந்தது. இரதங்கள் பொடி பட்டன. யானைகள் கதறிப் பதறி மடிந்தன; குதிரைகளின் பிணம் குவிந்தன. காலாட்களிற் பலர் மாய்ந்தனர். உதிர ஆறு ஓடியது. கவந்தங்கள் கூத்தாடின; கழுகும் பருந்தும் காகமும் வட்டமிட்டுப் பறந்து பிணங்களை யுண்டுப் பசியாறின. பேய்களும் நாய்களும் புலையுணவை யுண்டு மகிழ்ந்தன.

சுகுணனுக்கு வெற்றி கிடைப்பதைக்கண்ட பகைவர்களில் ஒருவன் தீரத்துடன் தன் தேரைச் செலுத்திக் கொண்டு, குறுநரி கொடும் புலியை எதிர்ப்பது போல் சுகுணவேந்தனை எதிர்த்தான். சுகுணன் தன் தேர்ப்பாகனை நோக்கி "சிறிது தேரை நிறுத்து'' என்று கூறி வில்லை வளைத்து நாணொலியுண்டாக்கி பகையரசன் மீது பாண

மழையைப் பொழிந்தான். சிறிது நேரம் இருவருக்கும் பெரும் போர் நிகழ்ந்தது. சுகுணன், 4 கணைகளால் பகையரசனுடைய தேர்க் குதிரைகளைக் கொன்ருன், 5 பாணங்களால் அவன் தேரையும், 3 பாணங்களால் வில்லையும், 15 பாணங்களால் அவன் மார்பிலுள்ள கவசத்தையும் அழித்தான். பகையரசன், தேர் வில் வாள் யாவும் தொலைந்து வெறுந்தரையில் நாணத்துடன் எரிந்தகாட்டில் நிற்கும் கரிந்த மரம்போல் நிலத்தைப் பார்த்துக்கொண்டு நின்ருன்.

சுகுணன் அப் பகையரசனை நோக்கி, "வீர! ஏன் தலைகுனிந்து நிற்கின்ருய்? வலிமையிழந்து வாடியிருக்கின்ற உன்னை நான் ஒரு போதுங் கொல்ல மாட்டேன். தேய்ந்திருக்கின்ற திங்களை ராகு என்னும் பாம்பு பற்றுவதில்லை. முழுத்திங்களையே பற்றுகின்றது. வீரபரம்பரையில் தோன்றிய நான், எல்லாம் இழந்து தமியனுய் நிற்கும் உன்னைக் கொன்ருல் என் புகழுக்கு மாசு ஏற்படும். ஆதலினுல் உனக்கு உயிர்ப்பிச்சை தந்தேன். செல்லுதி" என்று கருணையுடன் கூறிவிட்டுத் திரும்பினுன். வெற்றிச் சங்கம் முழக்கிக் கொண்டு சுகுணன் திரும்பியதைக் கண்டு பகைவரும் அவனது வீரத்தையும் கருணையையும் புகழ்ந்து போற்றினுர். சுகுணனுடைய சேனைகள் மிக்க மகிழ்ச்சியுடன் ஆரவாரித்தன. அச் சமயத்தில், தோல்வியுற்று சுகுணனுல் உயிர்ப்பிச்சை பெற்ற பகையரசன் ஒருபுறம் வீழ்ந்து கிடந்த வாளையெடுத்து பின்புறத்தே ஓடிவந்து சுகுணனுடைய தலையை வெட்டிவிட்டான். மன்னன் மாண்டதும் சேனைகள் கலங்கின. மற்ற பகையரசர்கள் சேர்ந்து எதிர்த்த சில வீரரை வென்று, கோட்டைக்குள் நுழைந்தனர். தங்கள் கொடியை உயர்த்தினர். அரசனுடைய அரண்மனை, கருவூலம் முதலிய யாவும் கைப்பற்றப்பட்டன; ஊரெங்கும் பகையரசருடைய ஆட்களின் அட்டகாசம்.

முதன் மந்திரியாகிய ஞானசேகரர் இந்நிகழ்ச்சிகளைக் குறித்துப் பெரிதும் வருந்தினர். தமது அரசனுக்கு எதிர் பாராத வகையில் எய்திய மரணத்தை நினைந்து நினைந்து கண்ணீர் வடித்தனர். செய்வது இன்னதென்று அறியா மல் திகைத்தனர். பகைவர்களில் ஒருவன் அரசுக்கட்டில் ஏறி பட்டந் தரிக்கப் பெற்ருன். ஞானசேகரர் அவனை எதிர்க்கமாட்டாதவராகி அவன் பால் அடங்கி நின்ருர். புதிய அரசாட்சியால் குடிகளுக்கு பல தொல்லைகள் விளைந்தன. ஜனங்கள் தங்கள், அரசர் பெருமானுக்கு நேர்ந்த மரணத்தைக் குறித்து ஆருத்துயரமடைந்தார்கள். சுகுணனுடைய நற்குணங்களைப் புகழ்ந்து பாராட்டினுர் கள். தாயையிழந்த கன்றைப்போல் எல்லோரும் வருந் தினர்கள்.

ஞானசேகரர் தனது அந்தரங்கச் சேவகனை அரசி தாய் வீடு சுகமாகச் சேர்ந்தனரா? என்று அறிந்துவர அனுப்பி னுர். அவன் அங்குபோய் அரசி சேரவில்லையென அறிந்து வந்து கூறினன். ஞானசேகரர் அது கேட்டு நடுங்கினுர். எங்குந் தேடுமாறு ஏவலரை யனுப்பினுர். ஒற்றர்கள் மூலம் அரசியும் தோழியும் மெய்க்காவலரும் வழியில் மாண்டு கிடந்ததாகச் செய்தி வந்தது. அரசனும் அரசியும் ஏக காலத்தில் மாண்டது பற்றியும் தவத்தால் பிறந்த செல்வச்சிறுமி தணிகை நாயகியின் பிரிவைக் குறித்தும் எண்ணி எண்ணி ஏங்கினர்.

“ஏ காலமே! உன் வலிமையே வலிமை; நீ எல்லா வற்றையும் அழித்துவிடுகின்ருய்; நாட்டைக் காடாகவும், காட்டை நாடாகவும் மாற்றுகின்ருய்; அரசனை ஆண்டி யாகவும், ஆண்டியை அரசனுகவும் செய்கின்றனை. மகோன்னத நிலையில் இருந்த அரசனையும் அரசியை யும் நீ விழுங்கிவிட்டாய். புல்லர்களைப் புவி புரக்கு மாறும், என்னை அவர்களிடம் இருந்து ஏங்குமாறும் செய்

தனே. நீ எவ்வளவு வேகமாகச் சுழல்கின்ருய். ஆ! ஆ! உன் சுழற்சியில் அகப்பட்டு மாண்ட மன்னர் கடல் மணலினும் அதிகம். அந்தோ! தருமபூபதியாகிய எமது அரசனே நீ எவ்வாறு மனந்துணிந்து அழித்தனே! அவர் கற்பக மரமன்ருே? எத்தனே பேர் அம்மரத்தின் நிழலில் இருந்து அவருடைய ஆதரவு என்ற கனிகளேயருந்தி இன்புற்றனர். பொல்லாத முள் மரங்கள் நிரம்ப இருந்தும் அவைகளே வெட்டாமல், ஏ காலசக்கரமே! கற்பகமரத்தை வெட்டினுயே!! இது உனக்கு நியாயமா? தருமக் காற்று வீசிய இந்த நாட்டிலே இப்போது அதருமமாகிய அனல் காற்று அடிக்கின்றதே. நளனேயும் அரிச்சந்திரனேயும் துன்புறுத்திய நீ என்னதான் செய்யமாட்டாய்" என்று காலத்தை நொந்தார்.

நடு இரவிலே, பெரிய இருளிலே, கடலிலே வீழ்ந்து சுழல்காற்றிலே, அலேகளின் நடுவே அகப்பட்டுத் தவிப்பவருக்கு ஒரு சிறிய மரத்துண்டு கிடைத்தது போல் கொடுங்கோல் மன்னனுல் அலக்கழிக்கப்படும் அந்நாட்டு மக்களுக்கு ஞானசேகரருடைய ஆதரவு சிறிது ஆறுதலேயளித்தது. ஓராண்டு கழிந்தது. புதிய அரசன் திடீரென்று நோய்வாய்ப்பட்டு மாண்டனன். அவன் மரணத்தைக் குறித்து ஒருவரும் வருந்தவில்லே; குடிகள் அனேவரும் ஏகோபித்து ஞானசேகரரையே மன்னராக இருக்கும்படி வேண்டினுர்கள். எல்லோருடைய எண்ணமும் திரண்டு தன்னே வற்புறுத்தியபடியால் ஞானசேகரர் அரியணே ஏறினுர். செங்கோல் பிடித்தார். ஆனுல் அவர் உள்ளத்தில் பெருமிதமோ சந்தோஷமோ இல்லே. தமது பழைய அரசனே நினேந்து மனம் புண்பட்டனர். பதவிமோகம் அவர்பால் அணுகவில்லே. அவர் பரம ஞானியல்லவா? நெருப்பைத் துரும்பு எதிர்க்காதது போல் அதிகாரச் செருக்கு அவரைச் சேரவில்லே. ஞானசேகரர் ஜனங்களின்

தொண்டனுகத் தன்னை நினைத்து மிகவும் அன்புடன் குடிகளை ஆதரித்து வந்தார். காட்சிக்கு எளியராகவும் காண்டற்கு இனியராகவும் இருந்தார். ஜனங்கள் அவரை வாயார வாழ்த்தினுர்கள். வரிகளைக் குறைத்தும், உழவர்களுக்கு அனுகூலம் புரிந்தும், ஒற்றுமையை நிறுவியும், ஞானசேகரர் அரசாட்சி புரிந்தனர். ஒருநாள் ஒரு கடிதம் அவர்பால் வந்தது. அதைக் கண்டு அவர் மனம் வருந்தியது.

ஞானசேகருக்கு வந்த கடிதம் வருமாறு:

இடம்: காடு காலம்: நடு இரவு

ஏ மந்திரியே! எச்சரிக்கை. நீ அதிகமாக அதிகாரஞ் செலுத்துகின்றுய். மந்திரியாக இருந்த நீ இப்போது அரசனுகி விட்டாய். தலை கால் தெரியாமல் திரிகின்றுய். அடக்குமுறையைக் கையாளுகின்றுய். ஜாக்கிரதையாக இரு.மகாராணியின் தலை போனதுபோல் உன் தலையும் போய்விடும்.

இப்படிக்கு
**வேடர் தலைவன்**

இதனை ஞானசேகரர் படித்தார். அக் கடிதத்தினை எழுதியவனைக் கண்டு பிடித்து, அரசமாதேவியைக் கொன்றது குறித்துக் கடுமையாகத் தண்டிக்கவேண்டும் என்று தீர்மானித்தனர். பலப்பல ஒற்றர்களை நாலாபக்கங்களுக்கும் ஏவி ஆராயுமாறு ஆணையிட்டனர்.

★ ★ ★

பாலூர் நல்ல வளம் பொருந்தியது. நீர் நிறைந்தவயல்களில் வாளை மீன்களும் வரால்மீன்களும் துள்ளிக் குதிப்பதனுல் பாக்கு மரத்தின் குலைகளிலிருந்து பாக்குப்பழங்கள் உதிரும். தென்னைமரங்களும் வாழைகளும் நிரம்பி எங்கும்

ஓரே பச்சைப்பசேலென்று இருக்கும். மரகதக்கம்பளம் விரித்தாற்போன்று நெற்பயிர் காட்சி தரும். மாட்சிதரும் அவ் வயல்களில் தாமரையும் ஆம்பலும் பூத்திருக்கும், தாமரையில் பெண் அன்னங்கள் மகிழ்ச்சியுடன் வீற்றி ருக்கும். பூஞ்சோலைகளில் வண்டு தேனை யுண்டு களி கொண்டு ஸ்ரீராகம் பாடும். தோகைமயில் ஓகையுடன் ஆடும். சரக்கொன்றையின் மலர் உதிரும். இயற்கை யழகு அங்கே எங்கும் பூரணமாக அமைந்திருந்தது. அந்த ஊருக்கு அருகில் ஒரு அழகிய குருகுலம். பல மாண வர்கள் அதில் கல்வி பயின்று வந்தனர்.

தங்கள் தங்கள் முயற்சியினுலும், குருநாதருடைய கருணையினுலும், அறிவாற்றலினுலும், விட்டகுறையாலும் கல்வியில் மாணவர்கள் தேர்வு பெறுவாராயினுர்கள். பல நக்ஷத்திரங்களுக்கு நடுவில் முழுமதி விளங்குவது போல், மாணவர்களுக்கு இடையில் சுப்ரதீபன் விளங்கினுன். அவன் முகத்தில் அழகு குடிகொண்டிருந்தது. அறிவின் களஞ்சியமாகவும், அமைதியின் வடிவமாகவும் அவன் திகழ்ந்தான். பாலூரில் வாழும் சிறந்த அரவாபரண ருடைய மகன் சுப்ரதீபன். அரவாபரணர் வேளாண் மர பில் வந்தவர். ஆயிரம் ஏக்கர் நிலமும், தோப்புகளும், துரவுகளும், பலப்பல மாளிகைகளும், நிரம்பிய செல்வ மும் படைத்தவர். அந்த மாவட்டத்தில் அவருக்கு நிக ரானவர்கள் இல்லை. குலத்தாலும் நலத்தாலும் மிக்க வர்; அவருடைய புகழ் எங்கும் பரவி இருந்தது. அவர் பேரைச் சொன்னுல் அழுத குழந்தையும் வாய்மூடும்.

இத்தகைய பெருங் குடும்பத்தில் பிறந்தவன் சுப்ர தீபன். ‘குலத்தளவே யாகுமாம் குணம்’ என்ற குடிப் பிறப்புக்குத் தக்கவாறு அடக்கம் பொறுமை அன்பு சீவ காருண்யம் முதலிய நற்குணங்களை அணிகலன்களாகப் பூண்டிருந்தனன். மாணவர்கள் யாவருக்கும் அவன்பால்

மதிப்பும் அன்பும் உண்டு. ஆசிரியருக்கும் அளவற்ற அன்பு உண்டு.

ஒருநாள் ஆசிரியர் மாணவர்களுடைய அறிவின் திறத்தை ஆராயவேண்டும் என்று கருதினர். மாணவர்கள் எல்லோரையும் அழைத்து கரும்பலகையில் அடியிற் கண்ட நேரிசை வெண்பாவை எழுதி அப்பாடலுக்குப் பொருள் ஒருநாழிகை நேரத்திற்குள் கண்டுபிடித்துக் கூறுமாறு கட்டளையிட்டார்.

**பண்புளருக் கோர்பறவை பாவத்துக் கோரிலக்கம்**
**நண்பிலரைக் கண்டக்கால் நாற்காலி—திண்புவியை**
**ஆளு மதுரை யழகியசொக் கர்க்கரவம்**
**நீள்வா கனம்நன் னிலம்.**

பிள்ளைகள் எல்லாம் இப்பாடலைப் பலமுறை படித்தனர். அதன் கருத்தை உற்று நோக்கினர். ஒன்றும் புலனாகவில்லை. விழித்தனர்; ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். சிலர் மனம் போனவாறு எண்ணினர்.

சுப்ரதீபனுக்கு அதன் பொருள் விளங்கியது. ஆசிரியரை நோக்கிக் கூறுவான்.

1 **பண்புளருக்கு ஓர் பறவை:—**

"நற்குணம் படைத்தவர்க்குக் கொடு"

பறவை-ஈ. ஈ என்பது கொடுவென்னேவல்.

2 **பாவத்துக்கு ஓர் இலக்கம்:—**

"பாவமான காரியங்களை நினைத்தாலும் கண்டாலும் அஞ்சு" இலக்கம்-எண். ஒரு எண் என்பது, அஞ்சு. அஞ்சு-பயப்படு.

3 **நண்பு இலரைக் கண்டக்கால் நாற்காலி:—**

"நட்பு இல்லாதவர்களைப் பார்த்தால் விலகியிரு" நாற்காலி-நான்குகால்களை யுடையது விலங்கு. விலங்கு-விலகிவிடு.

**4 திண்புவியை ஆளும் மதுரை அழகிய சொக்கர்க்கு:—**

வலிய உலகைக் காக்கின்ற மதுரை அழகிய சொக்கலிங்கப் பெருமானுக்கு.

**5 அரவம் நீள்வாகனம் நன்னிலம்.**

பணிவிடை செய்.

அரவம்-பணி; நீள் வாகனம்–விடை; நன்னிலம்–செய்.

நல்லவர்களுக்குக் கொடு; பாவத்துக்குப் பயப்படு; தீயவரைக் கண்டால் விலகு; மதுரை சொக்கேசருக்குப் பணிவிடை செய்.

இவ்வாறு விளக்கமாகப் பொருள் கூறினன். ஆசிரியரும் மாணவரும் அதிசயப்பட்டு அவன் அறிவின் திறத்தை மெச்சிப் பாராட்டினர்கள்.

அந்தப் பள்ளிக்கூடத்துக்கருகில் ஒரு இடைப் பாளையம் உண்டு. அந்த ஆயர் சேரியில் உள்ள கோபாலக்கோனுடைய மகள் குட்டித்தாய் மோர் கொண்டு வந்து விற்பாள்; ஆசிரியர்களும் மாணவர்களும் மோர் வாங்கிப் பருகுவார்கள். எல்லோரும் குட்டித்தாயிடம் அன்பு செய்வார்கள். பூரண சந்திரனை யொத்த முகமும், கரியவண்டு போன்ற கூரிய விழியும், தேன் போன்ற மொழியும், நுண்ணிய மதியும் படைத்தவள். அவளிடம் அழகு குடிகொண்டிருந்தது. அவள் தெய்வமங்கை போல் விளங்கினள்.

சுப்ரதீபனுடைய உள்ளம் குட்டித்தாயிடம் அன்பு கொண்டது. அவளிடம் அன்புடன் மோர் வாங்கிக் குடிப்பான். தனக்கு வீட்டில் தரும் தின்பண்டங்களை அவளுக்குத் தருவான். நாள் செல்லச் செல்ல பிறைமதி போல் அவர்கள் இருவர்கட்கும் அன்பும் வளர்ந்து கொண்டே வந்தது.

சுப்ரதீபன்:-குட்டி ! நீ நாள் தோறும் இந்த மோர்க் கூடையைத் தூக்கி வருகின்ருயே. உனக்குக் கழுத்து வலிக்கிறதில்லையா?

குட்டித்தாய்:—ஐயா! கழுத்து வலிக்காமலிருக்குமா? ஏழைகட்கும் பணக்காரருக்கும் ஒரே வகையான மாமிச உடம்புதானே? ஏழைகட்கு என்ன இரும்பிஞலே செய்த உடம்பா? இந்த மோர் விற்ருல்தானே எனக்கும் எங்கள் அம்மா அப்பா முதலியோருக்கும் சாப்பாடு. ஏழைகளாகிய நாங்கள் அங்கம் நோவப் பாடுபட்டால்தான் உணவு கிடைக்கும்.

சுப்ரதீபன்.—குட்டி ! உன்னைப்பார்த்தால் எனக்குப் பரிதாபமாக இருக்கின்றது. நீ மிகவும் ஏழையா?

குட்டி:—ஐயா ! நான் ஏழையென்பது என் ஆடையைப் பார்த்தால் உமக்கு விளங்கவில்லையா? இனி கிழிவதற்கு இடமில்லாமல் தைத்து வைத்திருக்கின்றதே. ஆனுல் நான் பெரிய சக்கரவர்த்தினி.

சுப்ர:— என்ன? நீ ஒரு சக்கரவர்த்தினியா? அது எப்படி?

குட்டி:— தசரதச் சச்ரவர்த்திக்குத் தையல்கள் அறுபதினுயிரம் அல்லவா? இதோ பாரும் என் பாவாடையிலும் தையல்கள் அறுபதினுயிரம்.

சுப்ரதீபன் தோள் குலுங்கக் குலுங்கச் சிரித்து அவள் அறிவின் திறத்தை மெச்சினுன்.

குட்டித்தாய்:— என்ன ஐயா! ஏழையைப் பார்த்து சிரிக்கின்றீர். நான் இப்படியே ஏழையாகவே இருப்பேனு? எனக்கும் ஒரு சமயம் நல்ல காலம் வரும். சந்திரன் தேயவும் வளரவும் இருக்கின்ருனே காரணந் தெரியுமா? வாழ்வு வளரும், தேயும், தேய்ந்தவன் வளர்வான். வளர்ந்தவன் தேய்வான். தனவந்தன்

ஏழையாவான்; ஏழை தனவந்தனுவான்; ஆண்டி அரசனுவான், அரசன் ஆண்டியாவான்...........

சுப்ர:— (அவள் பேச்சில் உள்ள அரிய கருத்துக்களை நோக்கி அதிசயப் பட்டான்). குட்டி! நீ பெரிய பேச்சுக் காரி. நீ படித்திருக்கின்ருயா?

குட்டி:— ஐயா! நானே பரம ஏழை. என்னை யார் படிக்கவைக்கப் போகின்ருர்கள்? படிக்க எனக்கு நேரம் எங்கே இருக்கின்றது? விடியற்காலையில் எழுந் திருக்க வேண்டும்; மாட்டுத் தொழுவத்தில் உள்ள சாணங்களை எடுத்து ஒரு புறங் குவிக்க வேண்டும். வீடு வாசல் பட்டி தொட்டி எல்லாவற்றையுங் கூட்ட வேண்டும். எருமுட்டை தட்ட வேண்டும். இன் னும் வீட்டுவேலைகளை எல்லாம் செய்யவேண்டும்- இதற்கு மத்தியில் மோர் விற்க வேண்டும். ஏழை களாகிய எங்களுக்கு நேரம் ஏது? சிலர் 'பொழுது போக வில்லையே' என்று வருத்தப் படுகின்றனர். அப்படி இரவு பகலாக உழைத்தாலும் எங்களுக்கு அரைவயிறு கால்வயிறு கஞ்சிதான் கிடைக்கின்றது.

சுப்ர:— குட்டி! ஏன் இந்தக் காதில் உதிரம் வருகின் றது?

குட்டி:— ஐயா! இன்று அதிக அலுப்பினுல் சிறிது அசந்து தூங்கிவிட்டேன். என் தாய் காதைக் கிள்ளிவிட்டாள். வலி பொறுக்க முடியவில்லை.

சுப்ரதீபன் அவளிடத்தில் மிகுந்த கருணை கொண் டான். அடுத்த அறையில் இருந்த தலைமை ஆசிரியர் குட்டித்தாயின் சொற்களைக் கவனித்துக் கொண்டிருந் தார். அவள் பேச்சில் இடைஇடையே பூத்த அறிவு மலரை உற்று நோக்கி, "ஏழைகட்கும் பணக்காரருக்கும் உடம்பு ஒன்றுதானே" "ஏழைகட்கு இரும்பினுலாய

உடம்பா?" "மனிதனுடைய வளர்ச்சியையும் தேய்வையும் உணர்த்தும் பொருட்டே சந்திரனை வளரவும் தேயவும் இறைவன் வைத்திருக்கின்றான்" இந்த சொற்களின் அருமைகளை எண்ணி எண்ணி இறும்பூதுற்றார். அவளைப் படிக்கவைத்து, அவளுக்கு இயல்பாகவே இருக்கும் அறிவுக்கலனுக்கு மெருகிடவேண்டும் என்று கருதினார்.

குட்டித்தாயின் தந்தை கோபாலக்கோனை அழைத்து, "அப்பா! உன் மகள் நல்ல அறிவுடையவளாகக் காணப் படுகின்றாள். ஆதலினால் அவளை இந்தக் கலாசாலையில் சேர்த்துப் படிக்க வைக்கலாம் என்று எண்ணுகிறேன். உன் சம்மதி யாது? என்றார்.

கோபாலக்கோன்:— சாமீ! எங்க ஜாதிக்கு படிப்பு என்னத்துக்குங்க. நாங்க என்ன படிச்சுப் புட்டு என்ன உத்தியோகமா பார்க்கப்போறங்க. ஆடு மாடு மேச்சுக் கினு இருந்தாலே போதுங்க.

ஆசிரியர்:— இந்தா! இந்த ஐம்பது ரூபாயை வைத்துக் கொள். உன் மகளை நாள்தோறும் பள்ளிக்கு அனுப்பு. அவள் படிக்கட்டும். அதனால் உனக்கு நன்மை உண்டாகும்.

கோபாலக்கோனுக்கு 50ரூபாய் கையில் வந்தவுடன் அளவற்ற சந்தோஷம். புதையல் கண்டெடுத்தவன் போல் துள்ளினான். வீட்டிலே சென்று மனைவிக்கு இந்த விஷயத்தைச் சொல்லி, குட்டித்தாயைப் பள்ளிக்கு அனுப்பினான்.

குட்டித்தாய் நாடோறும் பள்ளிக்குச் சென்று பய பக்தி விசுவாசத்துடன் படித்துவருவாள். அவள் தாய் சதா முணுமுணுப்பாள். "தடிச்சிறுக்கிக்குப் படிப்பு ஒரு கேடா? காலம் கெட்டுப்போச்சு. இத்தனை குழந்தை

களை வச்சுகிட்டு நான் ஒத்தையிலே என்ன செய்வேன்.'' என்று அங்கலாய்த்துக் கொள்வாள். குட்டித்தாய் ''அம்மா! நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் பள்ளிக்கு செல் வதற்கு முன் எல்லா வேலைகளையும் செய்து முடிப்பேன்'' என்று விடியற்காலையிலே எழுந்து சகல வேலைகளையும் பம்பரம் போல் சுழன்று செய்து முடித்துவிட்டு காலந் தவருமல் பள்ளிக்குச் செல்வாள். ஆசிரியருக்கு அவளுக் குப் பாடஞ் சொல்வதில் சிரமமேயில்லை. கற்பூரத்திலே தீப்பிடிப்பது போலே அவளுக்குக் கல்வியறிவு உண்டா யிற்று. தீவிரதரமான அறிவு; அந்தப்பள்ளிக்கூடத்திலே அவளை விஞ்சுவார் இலராயினர். சுப்ரதீபன் அவளுக்கு நல்ல ஆடைகளையும் வேண்டிய உபகாரங்களையுஞ் செய்து வந்தான்.

குட்டித்தாய் மங்கைப்பருவமடைந்தாள். அப்போது அவள் அழகு முன்னையினும் பன்மடங்கு சோபையாக இருந்தது. இலக்குமியும் நாணுமாறு அழகின் கொழுந் தாகத் திகழ்வாள். அவளைக் கண்ட கல்லும் புல்லும் உருகும். சுப்ரதீபன் அவளைத் தன் உள்ளத்தில் குடி வைத்தான். அவளையே தனக்கு வாழ்க்கைத் துணைவி யாக்கிக்கொள்ளத் தீர்மானித்தான். ஆனல் அவளோ ஆயர்மகள்; இவனோ வேளாளப் பிரபுவின் மகன். தன் எண்ணம் நிறைவேறுமா என்று ஐயுறுவான். தன் தந்தை சம்மதிக்க மாட்டாரே என்று அஞ்சுவான். அவனுக்குள் பெரும் போராட்டம் நிகழ்ந்தது.

ஏன் என் மனம் இப்படி அவளை நினைந்து நினைந்து உருகுகின்றது? அவள் மேனியில் அழகுக் கதிர் சுடர் விட்டு மின்னுகின்றதே. அவள் பேச்சில் அறிவுத் தேன் சொட்டுகின்றதே. ஆகா! அவளை மனைவியாகப் பெறு வதிலுஞ் சிறந்த பேறு இந்த உலகில் இருக்கின்றதா? ஆனல் தாய் தந்தையர் இதற்கு உடன்பட மாட்டார்

களே ? ஏன் தாய் தந்தையரைத் தள்ளி இவளை மணந்து கொண்டால் என்ன ? பாழும் ஜாதிக் கட்டுப்பாடுதானே தடை செய்கிறது............ சீ சீ நாம் எண்ணுவது தவறு. ஓர் மடந்தை பொருட்டு பெற்று, பாலூட்டி, அருமை பாராட்டி வளர்த்த கண் கண்ட தெய்வங்களாகிய தாய் தந்தையரைத் தள்ளுவதா ? அதுவும் மடமை. ஆனால் நமது மனம் அவளை விரும்பித் தத்தளிக்கின்றதே. ஐயோ அவளை நினைக்கும்போது எனக்கு உண்டாகும் இன்பத் திற்கு அளவில்லையே ? என்ன செய்வது ? சுவர்ண விக்ரகம்போல் விளங்கும் அவளைக் காண எனக்கு ஆயிரங் கண்கள் இல்லையே ? அவளுடன் வாழும் வாழ்வே சொர்க்கலோக வாழ்வு. எம்பெருமான் கருணை எனக்குத் துணை புரியுமா ? அவர் சித்தம் யாதோ!

குட்டித்தாயின் உள்ளத்திலும் இப்படியே ஒரு பெரும் போர் நிகழ்ந்தது. " ஏ நெஞ்சே ! என்ன உன் மடமை ! ஏன் நீ இப்படி அவரைக் குறித்து ஆசைப்படுகின்றாய் ? சுப்ரதீபனுடைய பெருமை எங்கே? உன் சிறுமை எங்கே? உன்னை அவர் அன்பு செய்வதனாலேயே மணந்துகொள் வார் என்று நீ மனப்பால் குடிக்கலாமா ? எட்டாத மரத் திற்கு ஏணி வைக்கலாமா ? முடவன் கொம்புத் தேனுக் குக் கொட்டாவி விட்டதுபோல் நீ ஏன் பேராசைப் படு கின்றாய் ? மன்மத சொருபமாகத் திகழும் அவரை எண்ணி எண்ணி உருகுகின்றனையே. உன் எண்ணம் ஈடேறுமா ?" என்று இப்படி பலப்பல நெஞ்சோடு கிளத்துவாள்.

ஒருநாள் அரவாபரணர் மனைவியிடம் சுப்ரதீபனு டைய திருமண விஷயமாய் ஆலோசித்துக்கொண்டிருந் தார். அதனைக் குறிப்பினாலறிந்த சுப்ரதீபன், மெல்லத் தன் தாயிடம் தன் கருத்தைத் தெரிவித்தான். தாய் கணவனிடம் மகனுடைய விருப்பத்தைத் தெரிவித்தாள்.

அரவாபரணர் அதுகேட்டு பெரிய வேதனை யடைந்தார். குட்டித்தாயின் குலம், தகுதி இவைகளை விசாரித்தார். மிகவும் ஒவ்வாததாக இருந்தன.

மகனை யழைத்து, "சுப்ரதீபா! இதுகாறும் நீ என் வார்த்தையைத் தள்ளி நடந்ததில்லை. நீ சிறந்த அறிவாளி. சற்புத்திரன் என்று உன்னை எல்லோரும் புகழ்கின்றனர். அப்பா! மகனே! நான் கூறுவதைக் கவனித்துக் கேள். நமது குலம் வேளாளர் குலம். சேக்கிழாரும், திருநாவுக்கரசரும் தோன்றிய மரபு. நீ நமது குலத்திலே பிறந்த ஒருத்தியை விரும்பி மணந்துகொள்வது முறைமை. உன்னால் காதலிக்கப்பட்டவள் இடைப்பெண்; அதிலும் பரம ஏழை. எப்படியடா அவர்களைச் சம்பந்தி என்று நான் கூறிக்கொள்ளுவேன். நான் சம்மதித்தாலும் நமது குலத்தினர் சம்மதிப்பார்களா? நீ நன்கு யோசித்துப்பார். ஆதலினால் உன் எண்ணத்தை மாற்றிக்கொள்" என்றார்.

சுப்ரதீபன்: அப்பா! தங்கள் வாக்கு எனக்கு வேதத்தினும் விழுமியது. தாங்கள்தான் எனக்குக் கண் கண்ட தெய்வம். ஆனால் நமது மரபின் பெருமையைக் கூறினீரே; அதுபற்றி அடியேன் சில கூற நினைக்கிறேன். என்னமோ என் மனம் அவள்பால் பதிந்து விட்டது. அவள் மரபும் உயர்ந்த மரபுதான்; யதுகுலம் அல்லவா, அவள் குலம்? யது என்பவன் யயாதி மன்னனுடைய மகனல்லவா? யாதவகுலம் சிறந்த குலம். கண்ணபிரான் அந்த மரபில்தானே அவதரித்தார். ஆனாய நாயனாரும், திருமூலரும் சேரனும் அக் குலத்தில் தோன்றினர் என்பதையும் நாம் உணரவேண்டும். எல்லாக் குலமும் உயர்ந்த குலமே.

"சாத்திரம்பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங் கொண்டு என்செய்வீர்"

என்பார் திருநாவுக்கரசு நாயனுர். தவிர அவளைப் பரம ஏழை என்று அவமதிக்கின்றீர். அவளுடைய அறிவுச் செல்வம் இமயமலையினும் உயர்ந்தது. தாங்கள் அவளை யழைத்து அவளுடன் சிறிது பேசிப்பாரும். அவளுடைய ஒவ்வொரு சொல்லிலும் அமிர்தம் சொட்டும்............ அப்பா! நான் தங்கள் சொல்லை ஒருபோதும் மீறி நடக்க மாட்டேன். ஆனுலும் தாங்கள் என் விருப்பத்தை நிறை வேற்றிவைக்க வேண்டும். தங்களிடம் வரமாக யாசிக் கிறேன். திருமகளனைய அவளைத் தாங்கள் மருமகளாகக் கொள்ளவேண்டும்.

அரவாபரணர் மனங் கலங்கியது. தனக்கு ஒரே மகன். குணமே வடிவானவன். அவன் மனத்திற்கு மாருக நடக்கவும் விரும்பவில்லை. ஆனல், குலத்தினர் உடன்பட மாட்டார். என்ன செய்வார் பாவம்! பலவாறு சிந்தித்தார். ஒன்றுந் தோன்றவில்லை. "மகனே! நீ கூறுவது நியாயமே. கண்ணபிரான் அவதரித்த யாதவ குலம் உயர்ந்ததுவே. அது க்ஷத்திரிய மரபு நான் ஒப்புக்கொள்ளு கிறேன். ஆனுலும் அவர்களிடம் பெண்கொடுத்து வாங்கி வழக்கப்படவில்லை. ஆனபடியால் நமது குலத்தில் உள்ளவர் உடன்பட மாட்டார்கள். நீ இந்த எண்ணத்தை மாற்றிக்கொள். பலருடைய மனம் புண்படுவதைவிட நாம் சிறிது புண்பட்டால் தவறு இல்லை" என்று கூறினுர். சுப்ரதீபன் பதில் கூறவில்லை.

அரவாபரணர், தனித்த இடத்தில், கோபாலக்கோனை அழைத்தார். கோபாலக்கோன் இவருடைய ஆணையின் கீழ் வாழ்பவன். வந்து தொழுது, ஒருபுறம் ஒதுங்கிக் கைகட்டி, வாய் பொத்தி நின்றுன். அரவாபரணர், "கோபாலா! என்னடா உன் மகள் என்னமோ என் மகனுக்குச் சொக்குப்பொடி போட்டுவிட்டாள். இவன் அவளை மணந்துகொள்ள வேண்டும் என்று பிடிவாதம்

பண்ணுகின்றான்; இதெல்லாம் நன்றாக இல்லையப்பா! நீ மிகவும் நல்லவன். வீணே கலகம் வேண்டாம்; உன் மகளுக்குப் புத்தி சொல்லி வை" என்றார்.

கோபாலக்கோன், "எசமான்! எனக்கு ஒன்றுமே தெரியாதுங்க. இந்தக்காலத்திய புள்ளைகளே இப்படித் தானுங்க கெட்டுப்போகுதுங்க. நான் போய் அவளைக் கண்டிக்கிறேனுங்க. நீங்க கோவிக்காதிங்க" என்று கூறிவிட்டு வீட்டிற்குச் சென்றான். மகளை யழைத்து, "குட்டித்தாய்! ஏது உனக்குக் கெட்டகாலமா? நீ போய் எசமான் மவன்மேலே ஆசைப்படலாமா? அவங்க எங்கே? நாம் எங்கே? அவங்க நெனச்சா நாம் இந்த ஊரிலேயே குடியிருக்கமுடியாதே. பயித்தியம் பிடிச்ச வளே! சாக்கிரதையாயிரு" என்று அதட்டினான். அவன் மனைவி அதைக்கேட்டு ஆடிப்பாடி குட்டித்தாயை அடித்துப் பிடித்து உதைத்தாள்.

அடுத்த நாள் மாலையிலே குட்டித்தாய் தண்ணீர் எடுக்க ஊர்ப்புறத்து உள்ள கிணற்றுக்குச் சென்று தண்ணீர் சேந்திக்கொண்டிருந்தாள். கோபாலக் கோன் மனைவி, குட்டித்தாய் மீது அடங்காத கோபத்துடன் சென்று அவளைக் கிணற்றிலே தள்ளிவிட்டு ஓடிவந்து விட்டாள்.

ஒப்பற்ற குணமுடைய குட்டித்தாய் கிணற்றிலே விழ்ந்தாள். "முருகா" "முருகா" என்று அலறினாள். அடுத்த நிமிஷத்தில் வேட்டையாடிக்கொண்டுவந்த ஞான சேகரர் நீர் வேட்கையால் அக் கிணற்றை யடைந்து எட்டிப் பார்த்தார். திருமகளைப்போல் அதில் தத்தளிக்கும் கன்னிகையைக் கண்டு திகைத்தார். உடனே கிணற்றில் குதித்து அவளை யெடுத்து மேலே விடுத்தார். அவளு டைய திருமேனியின் பொலிவைப் பார்த்தார். குட்டித்

தாய் சிறிதுநேரம் பொறுத்துக் கண் விழித்துப் பார்த்தாள். . கரங்குவித்து வணங்கினாள்.

ஞானசேகரர் அவளை உற்று நோக்கினார். "அம்மா! நீயார்? உன் பெயர் யாது? உன் ஊர் எது? ஏன் இந்தக் கிணற்றில் வீழ்ந்தனை? உண்மையைக் கூறு" என்றனர்.

குட்டித்தாய், "எந்தாய்! என் பேர் குட்டித்தாய்; யாதவப்பெண்; அதோ தெரிகின்றதே குடிசை அதுதான் என்வீடு. என் தந்தை பேர் கோபலக்கோன். தண்ணீர் எடுக்க வந்தேன். தவறி வீழ்ந்து விட்டேன்" என்றாள். (தாய் தள்ளி விட்டாள் என்று கூறினால் தாய்க்கு ஆபத்து வரும் என்று அஞ்சி மறைத்துச் சொன்னாள்).

ஞானசேகரர் அவள் ரேகையை உற்றுப் பார்த்தார். அவர் உள்ளத்தில் ஒரு பெரிய கிளர்ச்சியும் இன்பமும் உண்டாயின. புழமையை எண்ணினார். அவர் மனக் கண்முன், காலஞ்சென்ற சுகுண வேந்தர், அவர் தரும பத்தினியார், அவர்கட்குப் பிறந்த தணிகைநாயகி முதலிய நினைவுகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்தன. இளங் குழந்தை தணிகைநாயகியின் கரத்தில்கண்ட ரேகையை இப்போது பார்க்கிறார். பலப்பல எண்ணினார். ஒரு கை ரேகை மற்றொருவர் கையில் இராதே. இந்தப் பெண்மணியைப் பார்த்தால் ஆயன் மகளாகக் காணப்படவில்லையே. அரசன் மகளாகத்தான் இருக்கவேணும். "அம்மா! உன் குடிசைக்கு வா போவோம்" என்று குட்டித்தாயுடன் போனார்.

அங்கே கோபாலக்கோன் "ஏண்டி! குட்டித்தாய் எங்கே?" என்று கேட்டான். அவன் மனைவி, "அவள் எங்காவது சாகட்டும் ஏன் 'குட்டித்தாய்' 'குட்டித்தாய்' என்று உயிரை விடரே; அவளை அப்போதே வளர்க்க வேணாம்னு சொன்னேனே கேட்டாயா? இப்போ

அவளாலே நம்ம தலைக்குக் கல்லு வந்துட்டது'' என்று கர்ச்சித்தாள்.

இதற்குள் ஞானசேகரர் பரிவாரங்களுடன் குடிசைக்கு முன் வந்து நின்றார். யானை, தேர், பரி, பரிவாரங்கள் இவைகளைக் கண்ட கோபாலக்கோன் நடுநடுங்கி ஓடி வந்து கும்பிட்டான். ஞானசேகரர், "அப்பா! வாழி. இந்தக் குழந்தை உன் மகளா? உண்மையைக் கூறு'' என்றார். கோபாலக்கோன் மிகவும் பணிவுடன், "சாமி! உள்ளதைச் சொல்றேன்; நான் ஒரு நாள் ஆடு மாடு மேய்ச்சுக்கிண்டு காட்டிலே வரச்சே, இந்திராணியைப் போல ஒரு அம்மாவும் இன்னும் அநேக அம்மாக்களும், அனேக ஆட்களும், வெட்டப்பட்டு இறந்து கிடந்தாங்கள். அங்கே இந்தக் கொளந்தை அழுதுகிட்டு இருந்ததுங்க. நான் எடுத்துக்கிட்டு வந்து வளத்தேனுங்க. அப்போ அங்கே அம்பிட்ட ஒரு நகைகூட இருக்குதுங்க'' என்று உள்ளே சென்று ஒரு மோதிரத்தைக் காட்டினான். அது சுகுண வேந்தனுடைய பத்தினியின் மோதிரம். ஞானசேகரருக்குச் சந்தேகம் தீர்ந்தது; "அம்மா! என் மகளே! தணிகைநாயகி!'' என்று குட்டித்தாயைத் தழுவிக் கொண்டு அழுதார்.

"அப்பா! கோபாலா! நான் சுதர்மநாடு ஆள்பவன். என் பெயர் ஞானசேகரன். சுதர்ம நாட்டு மன்னன் சுகுண வேந்தன். அவருடைய மகள் இந்தக் குழந்தை. போரில் அந்த அரசர் மாண்டு போனார். அரசமாதேவி தாய் வீட்டுக்குப் போகும்போது கள்ளர்களால் மாண்டு விட்டார்கள். அரசனும் அரசியும் செய்த மாதவத்தால் வந்த தவக்கொழுந்து இக் கண்மணி. நல்ல வேளையாக இவளை நான் இப்போது காண நேர்ந்தது'' என்று பழைய வரலாறுகள் முழுவதையும் கூறினார். தணிகைநாயகி

தன் தாய் தந்தையர்க்குற்றதையும், தனது பிறப்பினையுங் கேட்டுத் துன்பமும் இன்பமும் அடைந்தாள்.

ஞானசேகரரைத் தொழுது, "அண்ணலே! நான் அன்று பிறந்ததைப் பார்க்கவில்லை. இன்று கிணற்றிலே மாளுந் தருவாயில் உயிர் துடித்துக்கொண்டிருந்த என்னை எடுத்துக் காப்பாற்றினீர். இனி நீர்தான் என் பிதா" என்று அழுதுகொண்டே கூறினாள். தணிகைநாயகியை எடுத்து அணைத்து, கண்ணீரைத் துடைத்து, "என் செல்வமே! அழாதே. நான் உனக்குப் பிதா என்பதில் ஆக்ஷேபனை இல்லை. வா. நீதான் இந்த உலகிற்கு அரசி." என்று செம்பொற்றேரின்மீது ஏற்றி, அந்த கோபாலக் கோனையும், அவன் மனைவியையும் அழைத்துக்கொண்டு சுதர்ம நாட்டுக்குச் சென்றனர். அங்கு எல்லோருக்கும் சுகுண வேந்தருடைய தவப் புதல்வி தணிகைநாயகி கிடைத்த செய்தியை யறிவித்தார். கள்ளர்களைத் தேடித் திரிந்த ஒற்றர்கள் அரசமாதேவியைக் கொன்ற வேடர்களைக் கண்டுபிடித்து, அரசியின் ஆபரணங்களுடன் கொண்டுவந்து ஞானசேகரர்பால் ஒப்புவித்தார்கள். அவர்களை யெல்லாம் தண்டித்து, தன் சேனைகளில் சேர்த்துக் கொண்டார்.

ஒரு நல்ல நாளில், இரத்தின சிங்காதனத்தில் தணிகைநாயகியை அமர்த்தி பட்டாபிஷேகம் பண்ணி விட்டார். நாட்டு மக்கள் அனைவரும் ஞானசேகரரை வாயார வாழ்த்தினார்கள். சிறிதுகூட பதவி மோகம் இன்றி மன்னன் மகளுக்கு முடிசூட்டிய அவருடைய உதார குணத்திற்கு வந்தனை செய்தார்கள். துன்பத்தின் எல்லையில் இருந்த குட்டித்தாய், இப்போது இன்பத்தின் எல்லையில் தணிகைநாயகியாக வீற்றிருந்தாள்.

கோபாலக்கோன் மனைவி தணிகைநாயகியின் திருவடிமீது வீழ்ந்து வணங்கி "அம்மா! உன்னை நான்

எவ்வளவோ கொடுமைகள் செய்தேன். கிணற்றிலும் தள்ளினேன். என் அடாத காரியங்களை எண்ணினால் என் நெஞ்சமே நடுங்குகின்றது. என்னை மன்னிக்க வேண்டும்" என்று வேண்டினாள். தணிகைநாயகி, "அம்மா! தாங்கள் வருந்த வேண்டாம். என் வினையை நான் அனுபவித்தேன். தாங்கள் என்ன செய்வீர்! எல்லாம் ஈசன் செயல். இனியாவது ஒருவருக்குந் தீங்கு செய்யாதிரு" என்று ஆறுதல் கூறினாள்.

இந்தச் செய்தி உலகமெங்கும் பரவியது. அரவாபரணரும் சுப்ரதீபனும் கேட்டனர். அரவாபரணர், "தன் மகன் காதலித்தவள் சுகுணவேந்தன் மகள்; இப்போது அவள் அரசுக் கட்டிலில் வீற்றிருக்கின்றாள். அவள் இப்போது நமது மகனை மணந்து கொள்வாளா?" என்று எண்ணினார்.

சுப்ரதீபன், "நமது காதற்கிளி இப்போது சக்ரவர்த்தினியாக வீற்றிருக்கிறாள். இந்த நிலையில் அவள் என்னை விரும்புவாளா? என் எண்ணம் ஈடேறுமா? முந்தி அவள் நம்மினும் தாழ்ந்தவள் என்றார் தந்தை. இப்போது அவள் நம்மினும் கோடி மடங்கு உயர்ந்திருக்கின்றாள். அவளைச் சந்திக்கவே முடியாதே. ஆகா! அவளுடைய வாழ்வு மேருகிரி. என் வாழ்வு அணுவினும் சிறியது. மேருகிரி எங்கே? அணு எங்கே? கந்தவேள் கருணை எப்படியோ?" என்று ஏங்கினான்.

ஞானசேகரர் தணிகைநாயகியின் திருமண விஷயமாகச் சிந்தித்தார். "அம்மா! நீ கணவனோடு வாழ வேண்டும். ஆதலால் உனக்குத் திருமணஞ் செய்யக் கருதுகிறேன். உன் கருத்து யாது?" என்று வினவினார். தணிகைநாயகி "அப்பா! பாலூரில் ஒரு சிறந்த அறிவாளரை நான் விரும்பியுள்ளேன். அவர் தந்தையார் பெயர்

அரவாபரணர். அவரைத் தாங்கள் மருமகனுகச் செய் யுங்கள்" என்ருள்.

ஒரு நல்ல நாளில், அரவாபரணருடைய வீட்டிற்கு முன் யானைகள், குதிரைகள், இரதங்கள், பல்லக்குகள் வந்து நின்றன. ஏனைய அமைச்சர்கள் அரவாபரணரையும், சுப்ரதீபனையும் ஏனையோரையும் சிறந்த வாகனங்களில் ஏற்றிக்கொண்டு சுதர்மநாடு சென்றனர். ஞானசேகரர் அரவாபரணரை வரவேற்று அரசி தணிகைநாயகியை சுப்ரதீபனுக்குத் தருவதாகச் சொன்னுர். முந்தி மறுத்த அரவாபரணர் அளவற்ற மகிழ்ச்சி யடைந்தார். திருமண நாள் நிச்சயிக்கப்பெற்றது. திருமண ஓலைகள் எங்கும் பறந்தன. இந்திரனது அமராவதி போல் அந் நகரம் அலங் கரிக்கப் பெற்றது. குமாரக் கடவுள் போன்ற சுப்ரதீப னுக்கும் வள்ளிநாயகி போன்ற தணிகைநாயகிக்கும் திருமணம் மிகச் சிறப்பாக நடந்தது.

காதலனும் காதலியும் அளவற்ற இன்பக்கடலில் மூழ்கினர். தணிகைநாயகி தன் நாயகனை "என் முன் னேற்றத்திற்குத் தாங்கள் தான் காரணம். அன்று என்னை அன்புடன் நீங்கள் தானே படிக்க வைத்தீர்கள். உங்கள் ஆசீர்வாதம் என்னை இந்த நிலையில் வைத்தது" என்ருள். சுப்ரதீபன் "என் கண்ணே! அன்றே நான் சக்ரவர்த்தினி என்று நீ சொன்ருயல்லவா? தசரதனுக்கு அறுபதினுயிரம் தையல்கள், என் ஆடைக்கும் அறுபதினுயிரம் தையல் கள்" என்றனையே. அந்தச் சொல் பலித்துவிட்டது. இப்போது நீ சக்ரவர்த்தினியாக இருக்கின்ருய்" என்று பாராட்டினுன்.

தணிகைநாயகி தான் படித்த குருகுலத்திற்கு அள விறந்த நிலங்கள் மானியமாக விடுத்தாள். தன் ஆசிரி

யரை அழைத்து வழிபாடு புரிந்து நவரத்தினங்களை அள்ளி வழங்கினுள். அனேக கல்லூரிகளைப் புதுக்கினுள். தான தருமங்கள் எண்ணிலாதன செய்தாள். அவள் புகழ் எங்கும் பரவியது. ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு "அம்மா! அம்மா!" என்று அவள் அருமந்த மகன் கொஞ்சி யழைக்கத் தணிகைநாயகி தாயாகித் தழைத்து வாழ்ந்தாள்.





# மங்கையும்-நங்கையும்

வீட்டில் ஒருவர் முகத்திலும் ஈயாடவில்லை; கவலை குடிகொண்டவர்களாக இங்கும் அங்கும் அவசரமாகத் திரிந்துகொண்டிருந்தார்கள். கார் போவதும் வருவது மாகவே இருந்தது. டெலிபோனில் சிலர் பேசிக் கொண் டிருந்தனர். மகாதேவ முதலியார் சென்னை கோபால புரத்தில் அவருடைய வீட்டில் உள்ள முன் பக்கத்துக் கூடத்தில் சாய்வு நாற்காலியில் ஆழ்ந்த துக்கத்துடன் அமர்ந்திருந்தார். அவர் மனைவியார் "ஐயோ! ஐயோ! கடவுளே!" என்று மெல்லிய குரலில் ஒரு அறையில் வேதனைக் கடலின் நடுவில் தத்தளித்துக் கொண்டிருந் தாள். மருத்துவச்சிகள், பிரபல டாக்டர்கள் ஒவ்வொரு கணமும் தங்கள் முழுத்திறமையுடன் ஏதேதோ முயற் சித்துக் கொண்டிருந்தார்கள். மகாதேவ முதலியார் அடிக்கடி அவர்களைப் பார்த்து "என்னமா இருக்கின் றது? ஒன்றும் ஆபத்து வராதே? நன்கு கவனித்துக் கொள்ளுங்கள்." என்று கலங்கிய கண்களுடையவராய் கேட்டுக்கொண்டே யிருந்தார். "தெய்வந்தான் துணை செய்யவேண்டும். எங்களால் என்ன இருக்கின்றது? உங்கள் தரும குணத்திற்கு ஒரு குறையும் வராது. ஆறு

லும் ஆபத்தான சந்தர்ப்பம்'' என்று உயர்ந்த மருத்துவ ஞர் கூறினர்.

திடீர் என்று குழந்தை அழுகுரல் கேட்டது. ''பிரச வம் ஆகிவிட்டது'' என்று ஒருத்தி ஓடிவந்து மகாதேவ முதலியாரிடம் கூறினுள். அவர் உடம்பு வேர்த்தது. பெரிய தலைச்சுமை இறங்கிவிட்டது போலவும், தேர்தலில் வெற்றி கண்டவனைப் போலவும் உள்ளத்தில் மகிழ்ச்சி வெள்ளம் பொங்கியெழுந்தது. மறுபடியும் ஒருத்தி ஓடி வந்து ''இரண்டு குழந்தைகள்; தங்கக்கட்டிபோல் பிறந் திருக்கின்றன. பெண் குழந்தைகள். எல்லாம் நம்ப பாட்டி மாதிரியே யிருக்கின்றன'' என்ருள். குழந்தை களின் அழுகுரலைக் கேட்ட அங்கிருந்த எல்லோரும் சிரித் தார்கள்.

எல்லோரும் சிரிக்கும்போது அழுதுகொண்டே நாம் பிறக்கின்ருேம். எல்லோரும் அழுகின்றபோது நாம் கண் மூடி விடுகின்ருேம். இதுதான் மனித இயற்கை.

சிறிது நேரத்திற்குப் பின் மருத்துவர்கள் எதிர் பார்த் ததற்கு மேற்கொண்டு தொகைகளைப் பெற்று காரில் காற் ருய்ப் பறந்தார்கள். ''தெய்வம் காப்பாற்றியது'' என்று மகாதேவ முதலியார் பெருமூச்சு விட்டார். அவர் முகத் தில் புன்னகை பூத்தது. பெண்கள் என்னென்னமோ உபசாரம் பண்ணிக் கொண்டிருந்தார்கள். இரு குழந் தைகளையும், தண்ணீரால் கழுவி மெல்லிய துணியால் துடைத்து முதலியாரிடம் காட்டினுர்கள். அவர் அவை களைப் பார்த்து ஆறுதல் அடைந்தார்.

பன்னிரண்டாவது நாள் குழந்தைகளை நன்கு அலங் கரித்துத் தொட்டிலில் இட்டார்கள். மங்கை, நங்கை என்று பேர் சூட்டினுர்கள். உற்ருர் உறவினர் நண்பர் முதலிய வர்கள் அன்று இனிய உணவுகளை அவர் வீட்டில் அருந்தி

மகிழ்ந்தார்கள் எல்லோருக்கும் சந்தனம் தாம்பூலம் முதலியவை வழங்கப்பட்டன. ஒருவரை மாற்றி ஒருவ ராகக் குழந்தைகளைத் தாலாட்டுவதும், சீராட்டுவதும், "ஏண்டியம்மா! அழாதேடா கண்ணு! என்னம்மா! என் ராஜாத்தி! பட்டம்மா! தங்கக்கட்டி!" என்று குழந்தைக ளைத் தோளில் சாய்த்துக் கொஞ்சிக் குலாவுவதுமாக இருந்தார்கள்.

குழந்தைகள் நன்கு வளர்ந்து ஐந்து ஆண்டு பரு வத்தை யடைந்தன. மிகுந்த கோலாகலமாகப் பள்ளிக்கு வைத்தார்கள். இரு செல்வியர்களும் சொந்த ரிக்ஷா வண்டியில் சென்று படித்து வந்தார்கள். தனியாகவும் ஆசிரியை ஒருத்தி வந்து காலையும் மாலையும் படிப்பித் தாள். இப்படியாக, கல்வி, பின்னல் வேலை, தையல் வேலை, பாட்டு, நடனம் ஆகியவைகளைக் கற்பித்தார் கள். குழந்தைகள் இருவரும் ஒருவரை ஒருவர் மிஞ்ச வேண்டும் என்று போட்டியிட்டுப் படித்தார்கள்.

மாம் பிஞ்சுகள் தோன்றுகின்றன. தொடக்கத்தில் அந்த மாம் பிஞ்சுகளைக் கடித்துத் தின்றால் ஒரே துவர்ப் பாக மட்டுமே இருக்கும். ஆனால் நாளாக ஆக சில மரத்தின் பிஞ்சுகள் புளிப்பாகவும், சில மரத்தின் பிஞ்சு கள் இனிப்பாகவும் மாறுகின்றன. அது போல் மங்கை யும் நங்கையும் இளமையில் ஒன்று போலத்தான் வளர்ந் தார்கள். நாள் செல்லச் செல்ல இருவர் குணங்களிலும் பல வேற்றுமைகள் காணப்பட்டன.

பெரும்பாலும் குடும்பங்களில் மூத்த குழந்தைகள் சிறிது அமைதியாக இருக்கும். பின்னே பிறந்த குழந் தைகள் சுட்டியாகவும் விஷமத்தன முடையதாகவும் இருக்கும். இந்த இயற்கைக்கு நேர்மாறாக இந்த இரு குழந்தைகளும் இருந்தன.

மங்கையாகிய மூத்த பெண் பிடிவாதக்காரி. எதுவும் தனக்கு வேணும் என்று அடம்பண்ணுவாள். எல்லாவற்றுக்கும் ஒரே அழுகை. கீழே விழுந்து புரண்டு புரண்டு அழுவாள். தலைமயிரை பிய்த்துக்கொள்வாள். தொட்டதற்கெல்லாம் கோபம். கேட்டதை உடனே தரவில்லையானால் தாபம். தன் தங்கையைத் "திம் திம்" என்று குத்துவாள். முதுகில் மொத்துவாள்; கிள்ளுவாள்; தலையில் குட்டுவாள்.

நங்கையாகிய இளையவள் பரம சாது; தின்பண்டங்களைத் தாய் தந்தையர் வேண்டித் தந்தால்தான் எடுப்பாள். மூத்தவள் என்ன செய்தாலும் பொறுமையாக இருப்பாள். ஒரு புறத்தில் அமைதியாக இருந்து படிப்பாள். உரக்கப் பேசமாட்டாள். மற்றக் குழந்தைகளுடன் சேர்ந்து தெருப்புழுதியில் விளையாடமாட்டாள். அவள் தாயார் சுவாமி கும்பிடும்போது தானும் அருகில் இருந்து கும்பிடுவாள். அவள் முகத்தில் சாந்தம் குடிகொண்டிருந்தது. "விளையும் பயிர் முளையிலே" என்ற முதுமொழிக்கு இணங்க அவள் இளமையிலிருந்தே நற்குணங்களுக்கு உறைவிடமாக இருந்தாள். அவளைப் பார்த்தவர்கள் எல்லோரும் "நல்ல பெண்" என்று கொண்டாடினார்கள். வாயார வாழ்த்தினார்கள்.

இவ்வாறு வீட்டுக்கு வருபவர்கள் இளையவளைப் புகழ்வதைக் கேட்ட மங்கை பொறாமை கொண்டாள். உள்ளம் புழுங்கினாள். தங்கையினுடைய சிலேட்டை உடைத்து வைப்பாள். அவளுடைய பாட புத்தகங்களைக் கிழித்து வைப்பாள். தந்தையார் "ஏண்டி! நேற்றுதானே சிலேட்டு வாங்கித் தந்தேன்; அதற்குள் உடைத்து விட்டாயா? மக்குப் பெண்ணே" என்று வைது நங்கையை அடித்தால் மங்கைக்கு அடங்காத மகிழ்ச்சி ஏற்

படும். தங்கையின் துன்பத்தைக் காண்பதில் அவளுக்குப் பரம திருப்தி.

நங்கை அப்படி எத்தனைத் துன்பம் நேர்ந்தாலும் தன் தமக்கைதான் இப்படிச் செய்தாள் என்று அவளைக் காட்டிக் கொடுக்கமாட்டாள். தமக்கையை அன்புடன் நேசிப்பாள். தீபாவளியின் போது குழந்தைகட்குப் புதிய பட்டுச் சட்டைகள் தைக்கப்பட்டன. தந்தை பட்டாசுகள் வாங்கித் தந்தார். குழந்தைகட்கு மிகவும் கொண்டாட்டம். பட்டுப் பாவாடைகள் பட்டுச் சட்டைகளை உடுத்துக் கொண்டு பட்டாசுகள் சுட்டன. அன்று இரவு மங்கை, தன் தங்கையின் பாவாடையில் ஒருபுறம் தீ வைத்துக் கொளுத்திவிட்டாள். நங்கை அதனை அறியவில்லை. மறுநாள் பொழுது விடிந்தது. தாயார் நங்கையின் பாவாடை வெந்திருப்பதைக் கண்டாள். கோபங் கொண்டாள். "மக்குப் பிண்டமே! பட்டாசு விட்டுப் பட்டுப் பாவாடையைக் கொளுத்திக் கொண்டனையா? இது கூட உனக்குத் தெரியவில்லையா? எருமைக் கன்றுக் குட்டி மாதிரி உட்கார்ந்துகொண்டிருக்கின்றாயே? உனக்குப் பட்டுப்பாவாடை தகாது" என்று திட்டி அடித்தாள். நங்கைக்குப் பாவாடை எப்போது பற்றிக்கொண்டதென்றே தெரியவில்லை. ஒருவேளை பட்டாசு விடுகின்றபோது பற்றிக்கொண்டது போலும் என்று எண்ணி இரங்கினாள். தன் அறியாமையை நினைந்து வருந்தினாள். தாயார் அடிக்கும்போது விம்மி விம்மி அழுதாள். அவ்வாறு அவள் அழுவதைக் கண்டு மங்கை தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

ஒருநாள் மகாதேவ முதலியார் மேஜைமீது ஐந்து ரூபாய் நோட்டு ஒன்று வைத்தார். அது சிறிது நேரத்திற்குள் மாயமாய் மறைந்துவிட்டது. அவர் அங்கும் இங்குந் தேடி அலுத்துப் போனார். மனைவியைக் கேட்டார்.

"நான் பார்க்கவில்லையே" என்றாள் அவள். முடிவில் வேலைக்காரப் பையன் எடுத்திருப்பானோ? என்று ஐயுற்றார். கண்ணாலே காணாமல் அவனைத் தண்டிக்க அவர் விரும்பவில்லை. தனது அஜாக்ரதையை நினைத்து வருந்தினார். எவ்வளவோ பணம் அவர் கையால் செல வழிக்கப்படுகின்றது; அதற்கெல்லாம் வருந்தியதில்லை. கைதவறிப் போன ஐந்து ரூபாயைக் குறித்துப் பலமுறை சிந்தித்து வருந்தினார். அது போனவழி தெரியவில்லையே என்று திகைத்தார். நான்கைந்து நாளைக்குப் பிறகு அழுக்குத் துணிகளை எடுக்க ஏகாலி வந்தான். மங்கையும் நங்கையும் பள்ளிக்குப் போயிருந்தார்கள். மகாதேவ முதலியார் தன் ஆடைகளை யெடுத்து ஏகாலியிடம் போட்டார். அவர் மனைவியார் குழந்தைகள் சட்டை பாவாடைகள் தனது சேலைகள் முதலிய எல்லாவற்றையும் எடுத்துப் போட்டுக் கணக்கு எழுதினாள். ஏகாலிக்குத் துணிகளைப் போடும்பொழுது சட்டைப் பைகளில் ஏதாவது இருக்கின்றதா என்றும், பொத்தான்கள் இருக்கின்றதா என்றும் பார்ப்பது வழக்கம். அப்படிப் பார்க்கும்பொழுது நங்கையின் சட்டைப் பையில் ஐந்து ரூபாய் நோட்டு இருந்தது. அதைக் கண்டு திடுக்கிட்டாள். கணவனிடஞ் சென்று, "இதோ காணாமல் போன நோட்டு அந்த ஊமைச்சி நங்கையின் சட்டைப் பையில் இருந்தது" என்றாள். அவர் அதைக் கண்டு மகிழவில்லை. தன் பெண் இளமையிலே திருடப் பழகிக்கொண்டதே என்று வருந்தினார். அது முதல் தாய் தந்தையருக்கு அவளிடத்தில் அருவருப்பு ஏற்பட்டது. "இவள் திருட்டுக் கழுதை, உருப்படமாட்டாள்." என்று திட்டினார்கள். மங்கை எடுத்து நங்கையின் சட்டைப் பையில் வைத்த வஞ்சனைச் செயலை அவர்கள் எப்படி அறிய முடியும்? அது எங்கும் நிறைந்த ஆண்டவனுக்குத்தானே தெரியும். இவ்வாறு மங்கை நங்கைக்கு இழைத்த கொடுமைகள் அநந்தம்.

இருவருக்கும் அப்போது வயது பதினுன்கு. S.S.L.C. படித்துக்கொண்டிருந்தார்கள். மங்கை அறிவை அழுக்காக்கத் தக்க கதைப் புத்தகங்களையும் தெய்வ நிந்தனை புரியும் பொருளற்ற தாள்களையும் படித்து தன் மனதில் "இந்த உலகத்திற்கு அப்பால் ஒன்றுமே கிடையாது. கடவுள் என்பது யாரோ கட்டிவைத்த கற்பனை. இருந்தால் கண்ணுக்குத் தெரியாதா? கண்ணுக்குத் தெரியாத ஒன்றை எப்படி நம்புவது? புண்ணியம் பாவம், சுவர்க்கம் நரகம் என்று கூறுவதெல்லாம் சுத்தப் புளுகு. இவைகள் எல்லாம் முன்னேற்றப் பாதையின் முள்வேலிகளாகும். மூட நம்பிக்கை யென்பது முன்னேற்றத்தின் முட்டுக் கட்டை" என்று துணிந்தாள். கடவுளை வணங்குவதைக் கண்டு கண்சிமிட்டி, நாவை நீட்டிப் பரிகசிப்பாள். "திருக்கோயில்கள் சுத்தச் சோம்பேறிகள் மடம்" என்பாள்.

நங்கை சனி ஞாயிறுகளில் காலையில் நீராடி பூஜை வீட்டில் அமர்ந்து முருகர் படம் வைத்துப் பூசிப்பாள். திருமுருகாற்றுப்படை, கந்தரநுபூதி, கந்தர் கலிவெண்பா, என்ற இம் மூன்று மாணிக்கம் போன்ற தெய்வ மணங் கமழுஞ் செந்தமிழ் நூல்களைப் பாராயணஞ் செய்வாள். தன் தமக்கையுடன் கடவுள் விஷயமாக விவாதஞ் செய்வாள். முருகவேளை நினைத்து உள்ளம் உருகுவாள்.

ஒருநாள் ஞாயிறு; காலை ஒன்பது மணி. தாயார் சமையல் செய்துகொண்டிருந்தாள். தந்தையார் வெளியே போயிருந்தார். தன் சினேகிதைகளுடன் ஒரு அறையில் அமர்ந்து மங்கை சீட்டு விளையாடிக்கொண்டிருந்தாள். அதற்கு அடுத்த அறையில் நங்கை பாராயணஞ் செய்துகொண்டு இருந்தாள். அவள் குரல் தேன்போல இனிமையாகக் கேட்டவர் கருங்கல் மனத்தையுங் கரைவித்து குழையச் செய்தது.

சீட்டு விளையாடிக்கொண்டிருந்த பெண்களில் இரண்டு பேருக்கு நிரம்பிய தெய்வபக்தி. அந்தப் பாடலைக் கேட்டு உள்ளம் உருகி சீட்டு விளையாட்டை விட்டு பூஜை யறையில் போய் நங்கையின் பாடலைக் கேட்கத் தொடங் கினார்கள். சீட்டாட்டத்திலே அழுந்திய பற்றுடைய மங்கைக்கு மிகவும் எரிச்சலுண்டாகியது. பொங்கி யெழுந்த கோபத்துடன் பூஜை வீட்டில் நுழைந்து "அடியே! மூதேவி! ஏண்டி இப்படி உன் தகரக் குழாய் போன்ற தொண்டையைக் கிழித்துப் பாடி என் மண் டையை உடைக்கின்றாய்? உதவாக் கரையே! சுத்த மூட த்தனமாகக் கடவுள் கடவுள் என்று ஏண்டி நேரத்தை வீணாக்குகின்றாய்?" என்றான்.

"அக்காள்! நான் உங்கள் ஜோலிக்கு வந்தேனா? சிவனே என்று நான் பூஜை செய்தால் உனக்கு என்ன கெடுதல்? ஏன் வலிய சண்டைக்கு வருகின்றாய்? நீ போய் சீட்டு விளையாடு. நான் பாராயணஞ் செய்தால் உனக்கு என்ன நட்டம்?"

"அடி அசடே! கண்ணுக்குக் காணாத கடவுளை நம்பி ஏண்டி கண்மூடித்தனமாக இருக்கின்றாய்? நீ ராகம் போட்டுப் பாடுவதனால் என் உயிருக்கல்லவா வேதனை யேற்படுகின்றது. மனதிற்குள் படித்துத் தொலையேன்".

"அக்காள்! சற்றுப் பொறு; நிதானமாகப் பேசு. அமைதியில்தான் உண்மையை யறியலாம். ஆத்திரங் கொண்டு பேசாதே. கண்ணுக்குத் தெரியாத கடவுளை நீ ஒப்புக்கொள்ள மாட்டாயல்லவா?"

"ஆமாம் நூறுமுறை சொல்லுகின்றேன்; ஒப்புக் கொள்ள மாட்டேன். சும்மா கேட்டு என் உயிரை வதைக் காதே."

"அக்கா! நில்லு; "உயிரை வதைக்காதே" என்று கூறினாயே. அந்த உயிரைக் கண்ணாலே கண்டிருக்

கின்றனையா? அது கருப்பா? சிவப்பா? குட்டையா? நெட்டையா? இதுவரை நீ அந்த உயிரைக் கண்டதே யில்லையே. அப்படிக் காணுமையால் 'நான் உயிரில்லாதவள்' என்று நீ சொல்லிக்கொள்வாயா? அப்படிச் சொன்னுல் உன்னைக்கண்டு உலகஞ் சிரிக்காதா? உடம்புக்குள்ளே உறையும் உயிரை இந்தக் கண்கொண்டு நிச்சயமாகக் காணமுடியாதல்லவா? பரம்பொருள் உயிருக்கு உயிராக உயிர்களில் உறைகின்ருர். ஆதலினுல் அவரை அகக் கண்ணுலன்றி முகக்கண்ணுல் காண முடியுமா?

"முகத்தில் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்தில் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்"

என்று திருமூல நாயனுர் அருளிச் செய்கின்ருர்."

அங்கிருந்த சிறுமியர்கள் "பேஷ் பேஷ்" நங்கை கூறுவது சரி சரி. அறிவுக்கு விருந்தாக இருக்கின்றது" என்று கை தட்டினுர்கள்.

மங்கை, "அடியே! நில்லு; சாமர்த்தியமாகப் பேசி என்னை ஏமாற்றப் பார்க்கின்ருயா? இதற்கெல்லாம் நான் ஏமாறமாட்டேன். உயிருக்கு உயிராக ஒன்று இருக்கின்றதென்று நீ எவ்வாறு கண்டாய்?"

"அக்கா! மணிவாசகர் கூறுகின்ருர்:
"ஓராதார் உள்ளத்துள் ஒளிக்கும் ஒளியானே
நீராயுருக்கி யென் ஆருயிராய் நின்ருனே."

திருஞானசம்பந்தர் கூறுகின்ருர்:

'உரைசேரும் எண்பத்து நான்குநூருயிரமாம் யோனிபேதம்
நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் ஆங்காங்கே
நின்ருன்'

தேவார திருவாசக முதலிய அருள் நூல்களைப் படித்தால் அங்கை நெல்லிக் கனிபோல் உனக்கு விளங்கும்"

“ அடி பயித்தியக்காரி ! இந்த வெறுஞ்சுவடிகளை யெல்லாம் நம்பாதே. அவை யெல்லாம் வெறும் வித்தைகள்.”

“ அக்கா ! சற்று நிதானமாகச் சிந்தித்துப் பதில் சொல். தேவார திருவாசகங்கள் அருளாளர்களாகிய தீர்க்கதரிசிகள் எழுதியவை. அவைகளை நம்பக்கூடாது என்கின்றாயே. நீ எங்காவது அயலூருக்குப் போகின்றாய்; வழி பிரிகின்ற இடம் வருகின்றது. நீ அந்தப் பக்கத்திற்குப் புதிதாகப் போகின்றாய். அப்போது என்ன செய்வாய்? அங்கே எழுதியுள்ள கை காட்டிப் பலகையைப் பார்ப்பாய். அதில் உள்ள எழுத்தை நம்பி நீ குறித்த ஊரை நாடி நடக்கின்றாய். இது உண்மை தானே. கேவலம் ஒரு கை காட்டிப் பலகையை கூட நம்புகின்ற நீ தமிழ்மறையாக விளங்கும் தேவார திருவாசகங்களை நம்பக்கூடாதா? அந்த கைகாட்டிப் பலகைக்கு மதிப்புக் கொடுத்தாயே; நமது செந்தமிழ் நாடு செய்த தவப் பயனாக வந்த நால்வர்கள், அருணகிரிநாதர், திருவள்ளுவர், பட்டினத்தார், தாயுமானார், இராமலிங்கர் முதலிய அநுபூதிமான்கள் அருளிய அநுபவப் பாடல்களை நம்பமாட்டேன் என்று சொல்ல உன்வாய் கூசவில்லையா? உனக்கு வெட்கமாக இல்லையா?

“கண்ணுவாரேனும் உனைக் கைதொழாராயின் அந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே,”

என்ற தாயுமானார் திருவாக்கை உனக்கு ஞாபகப் படுத்துகிறேன். நீ என் தமக்கை என்பது சரீரசம்பந்தந் தான். இனி என்னுடன் இது சம்பந்தமாகப் பேசாதே. உன் மனம்போன போக்கில் போ.”

பொருள் நிரம்பிய நங்கையின் நல்லுரைகளைக் கேட்டு ஏனைய பெண்கள் மிகவும் பாராட்டி நங்கையை மெச்சி உள்ளம் உவந்து தங்கள் வீடுகட்குச் சென்றார்கள். அது

முதல் அவர்கள் தமிழ் மறைகளை வாங்கிப் பாராயணஞ் செய்யத் தொடங்கினார்கள். ஆனால் நாய் வாலை யொத்த மங்கையின் அறிவில் உள்ள கோணல் மட்டும் நிமிர வில்லை.

நாள் செல்லச் செல்ல நங்கையின் மீது வெறுப்பு மங் கைக்கு இமயமலை போல் வளர்ந்தது. அவளைக் கண் டாலே நாகப் பாம்பைக் கண்டதுபோல் சீறுவாள்.

"எவ்வுயிரும் பராபரன் சந்நிதியே" என்ற உண் மையை உணர்ந்த நங்கை மங்கையை வெறுக்காமல் "அவளுக்கு நல்லறிவை எங்கும் நிறைந்த பரம்பொருள் தருவாராக. உலகமெங்கும் மக்களுக்கு நல்ல எண்ண மும் மனிதப் பண்பும் ஓங்கி வளர்க" என்று சதா பரம கருணாநிதியாகிய பன்னிருகைப் பெருமானை வேண்டி முறையிடுவாள்.

மங்கையும் நங்கையும் S. S. L. C. பரீட்சையில் தேறி விட்டார்கள். மகாதேவ முதலியார் பெண்களிருவரை யும் உயர்தரக் கல்லூரியில் சேர்க்க முயற்சி செய்தார்.

நங்கை, "அப்பா! ஆங்கிலப் படிப்பு இந்த அளவு எனக்குப் போதும். இன்னும் படிக்க வேண்டிய தமிழ் நூல்கள் எண்ணில்லாதன இருக்கின்றன. அவைகளை நான் வீட்டிலிருந்தபடியே சிறிது சிறிதாக ஒய்ந்த நேரத் தில் படித்துக்கொள்வேன். அம்மாவுக்கும் வயதாகி விட்டது. நான் வீட்டிலிருந்து சமையல் காரியத்தில் அம்மாவுக்கு ஒத்தாசை செய்யவேணும். ஓதலின் நன்று ஒழுக்கமுடைமை. கற்ற வித்தை முத்தி தராது. கல்வி கைகாட்டி மரத்திற்கு நிகரானது. கைகாட்டிமரத்தினடி யிலேயே அமர்ந்துவிட்டால் குறித்த ஊருக்குப் போய்ச் சேரமுடியாது. நடந்தால்தான் சேரலாம். அதுபோல் கற்ற வண்ணம் நிற்றல் வேண்டும். வேண்டுமானால் அக் காள் மேல் படிப்பு படிக்கட்டும். "கற்பனவும் இனி

அமையும்'' என்கின்றார் மணிவாசகர். ஆதலின் என்னை கல்லூரியில் சேர்க்கும் முயற்சி வேண்டா'' என்றாள்.

மகாதேவ முதலியார் சரி என்று கூறி மங்கையை மட்டும் கல்லூரியில் சேர்த்தனர். மங்கை நங்கையை அவ மதித்து ''இந்த அசடுக்குப் புத்தியே கிடையாது. படிப்பைக் கூட வெறுக்கின்றாள். பழங்காலத்துப் பஞ்சாங்கம். இது ஒன்றுக்கும் உருப்படாது'' என்று எண்ணினாள். கல்லூரிக் குப் போவதும், அழகாக அலங்கரித்துக் கொள்வதும், கல்லூரி விட்டவுடன் கடற்கரை சென்று உலாவிவிட்டு வீட்டிற்கு வருவதும், ஆங்கிலத்தில் உள்ள நாவல்களைப் படிப்பதும் கடவுள் நிந்தனை புரிவதுமாக மங்கை திரிந் தாள்.

நங்கை அதிகாலையில் எழுந்திருப்பதும், நீராடுவதும், சமையல் காரியங்களைப் பார்ப்பதும், தாய் தந்தையரை அன்புடன் உபசரிப்பதும், முருகனைப் பூசிப்பதும், அருட் பாடல்களைப் பாடுவதும், தாயாருடன் கோவிலுக்குப் போவதுமாக இருந்தாள்.

மங்கை இன்டர்மீடியட் பரிட்சையில் தேறினாள். மகாதேவ முதலியாருடைய தங்கை புரசவாக்கத்தில் வாழ்ந்தாள். அவள் மகன் சுகுணன் இண்டர்மீடியட் படித்துக் கொண்டிருந்தான். அடக்கமான பிள்ளை. பெரியவர்களிடம் மிகவும் பயபக்தியுடன் நடப்பான். கெட்டியாகப் பேசமாட்டான். ஏனைய பள்ளி மாணவர்க ளிடம் கூடி கண்டவாறு திரியமாட்டான். மகாதேவ முதலியார் தனது மூத்த புதல்வி மங்கையை அவனுக்குக் கல்யாணம் பண்ணிவைக்க வேண்டுமென்று கருதினார். மனைவியிடம் ஒருநாள் மெல்ல தன் கருத்தை வெளியிட் டார். கணவன் கருத்தை அநுசரிக்கின்ற அந்த உத்தமி யும் ''தங்கள் உள்ளம் போல் செய்யுங்கள்'' என்றாள்.

மங்கை இதனையறிந்து, "எனக்கு இப்போது எதற்குக் கல்யாணம்? **B. A.** படித்தபின் தான் அதைப்பற்றிப் பேச வேண்டும். இருந்திருந்தும் அந்தப் பத்தாம் பசலியைத்தானு நான் விரும்புவேன். கல்யாண விஷயமாக இப்போது ஒன்றும் பேசவேண்டாம். காலம் வந்தால் தானே நடக்கும்" என்று வெடுக்கென்று கூறி விட்டாள். அந்தப் பேச்சு அத்துடன் அடங்கிவிட்டது.

ஒருநாள் மாலை 6 மணி. வானம் தெளிந்திருந்தது. கதிரவன் தன் கரங்களைச் சுருக்கிக்கொண்டு, உலகில் நடக்கும் வஞ்சனைச் செயல்களையும் இருட்டுக் கடைகளையும் லஞ்ச ஊழல்களையும் தெய்வத்தின் பெயரால் நடக்கும் அநியாயங்களையும் கண்டு கொதித்தவன் போல் சிவந்து, மேலை வானத்தையும் சிவக்கச் செய்து சாய்ந்து கொண்டிருந்தான். தென்றல் காற்று இனிது வீசிக் கொண்டிருந்தது. கடற்கரையில் ஜனங்கள் வருவதும் போவதுமாக இருந்தார்கள். அங்கு மணலில் அமர்ந்து பின்னிவிட்டிருக்கும் ஜடை கரும்பாம்பு போல் பூமியில் புரள செய்தித்தாளைப் புரட்டிக் கொண்டிருந்தாள் மங்கை. அங்கே ஒரு கட்டிளைஞன் அவளைக் கடைக் கண்ணுல் பார்ப்பதும் நீலக்கடலைப் பார்ப்பதும், என்னமோ யோசிப்பதும் போல் உலாவிக் கொண்டிருந்தான். மங்கை அவனைக் கண்டாள். அவள் மனதில் ஒரு மாறுபாடு உண்டாகியது. அவனையே கூர்ந்து நோக்கினுள். தன்னை அவள் கவனிப்பதை அவன் கவனித்தான். இந்த மான் நமது வலையில் விழுந்துவிட்டது என்று எண்ணி மகிழ்ந்தான்.

மெல்ல அவள் அருகில் வந்தான். கனைத்துக் கொண்டான்.

"இன்றைய பேபரா?"

"ஆம் பாருங்களேன்"

"இல்லை இல்லை; நீங்கள் படியுங்கள். உங்களுக்கு நான் இடைஞ்சல் செய்யக் கூடாது."

பரவாயில்லை படியுங்கள்; நான் படித்துவிட்டேன். இப்படி இருவரும் உள்ளம் சுழல உரை தடுமாற கண்கள் சுழல உரையாடிக் கொண்டார்கள். நான்கைந்து நாட்கள் அதே இடத்தில் சந்திக்கலானார்கள். ஒருவரை ஒருவர் நேசித்து தங்கள் கருத்தை வெளியிட்டுக் கொண்டார்கள். இருவரும் மணந்துகொள்வதென்று முடிவு கட்டிக் கொண்டார்கள்.

வழக்கம்போல் ஒருநாள் கடற்கரையில் இளங்காதலர் இருவரும் சந்தித்தார்கள். அர்த்தமில்லாதபடி பேசிக் கொண்டிருந்தார்கள். அங்கே அந்த வாலிபனுடைய நண்பன் ஒருவன்: தற்செயலாக வந்தான். "ஏண்டா! ரகு! உடம்பு தேவலையா? எங்கே மருந்து வாங்கப் பிறகு வரவேயில்லை? என்ன வேலை கிடைத்ததா? ஏதாவது வெற்றிலை பாக்குக் கடையாவது வைக்கின்றது தானே? அன்று கைமாற்ருக வாங்கிய பதினைந்து ருபாயைத் திருப்பித் தரவே யில்லையே? இருதய வலி சுமார்தானே?'

அப்படிக் கேட்டதும் அந்த வாலிபன் அசந்து போனான். "உடம்பு தேவலை தான். நான் பிறகு வருகிறேன். நீ போய் வா" என்றான். இந்தச் சொற்களில் இருந்து, அந்த வாலிபன் தன்னைப் 'பெரிய சீமான் என்றும் பெரிய வர்த்தகம் செய்கின்றேன்' என்றும் கூறியது பொய்மை என்று மங்கை யுணர்ந்தாள். அவன் மீது எழுந்த மோகவெறி தணிந்தது. அந்த வாலிபனுடன் பேசியவனை டாக்டர் என்று அறிந்தாள். அவனுடைய மிடுக்கான உடையும், துடுக்கான நடையும் அவனை மயக்கின. பிறகு

"அவர் எங்கே யிருக்கின்றார்" என்று அவனைக் கேட்டு மெல்ல அவன் முகவரியை அறிந்துகொண்டாள்.

நல்ல பாரீஸ் மடந்தை போல் அலங்கரித்துக் கொண்டு தியாகராய நகர் சென்று அந்த டாக்டரைச் சந்தித்தாள். அந்த டாக்டர் அவளை வரவேற்று உபசரித்தான். இருவர் மனமும் ஒன்றுபட்டது. நாடோறும் அங்கே மங்கை போய்வருவாள். அங்கே வந்த ரகு தான் காதலித்த அம் மங்கை டாக்டரைக் காதலித்திருப்பதைக் கண்டு கனன்றான். கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போனதை எண்ணி வருந்தினான். மனதில் பற்பல சிந்தனைப் புயல்கள் எழுந்து சுழித்து அடித்தன. "அவளை ஒருகை பார்க்கிறேன்" என்று கறுவிக் கொண்டே அந்த இடத்தை விட்டு அகன்றான்.

தினச் செய்தித் தாளில் "டாக்டர் R. G. தரனும் மங்கையும் பதிவுத் திருமணஞ் செய்து கொண்டார்கள்" என்ற செய்தி வெளி வந்தது. அதைப் படித்து மகாதேவ முதலியார் திடுக்கிட்டார். மனைவியினிடம் விஷயத்தைக் கூறி விசனித்தார். நங்கை கேட்டு தமக்கையின் போக்கை எண்ணிக் கலங்கினாள். மேல் படிப்பு படிக்க வைத்த பலன் இது என்று முதலியார் வருந்தினார். டாக்டர் R. G. தரன் எங்கே யிருக்கின்றார் என்று ஆராய்ந்தார்.

ஒரு நாள் காரில் மாப்பிள்ளை டாக்டர் R. G. தரனும் மங்கையும் கோபாலபுரத்திற்கு வந்து தாய் தந்தையரைக் கண்டார்கள். மகாதேவ முதலியார் தலைக்கு மேல் சென்ற வெள்ளம் எத்தனை அடிபோனால் என்ன என்று தேறி' வந்தவர்களை ஒருவாறு வரவேற்று உபசரித்து அனுப்பினார். இப்படி எப்போதாவது ஒரு சமயம் டாக்டரும் மங்கையும் வந்து போவார்கள். வரும்போதெல்லாம் பழங்கள், பிஸ்கட்டு, சாக்லட் முதலியவைகளை நிரம்ப வாங்கி

வந்து தருவார்கள். நாள் செல்லச் செல்ல பெற்ற பாசத்திஞல் மகள் மங்கையை அன்புடன் தாய் தந்தையர் பேசி, ''என்னமோ எங்காவது சுகமாக இருந்தால் சரி'' என்று ஆசி கூறி உபசரித்தார்கள்.

மகாதேவ முதலியார் தான் முன் எண்ணிய எண்ணத்தின்படி மூத்த புதல்வியை தங்கை மகன் சுகுணனுக்கு மணஞ் செய்விக்க முடியாது போன குறையை நிறைவாக்கும்பொருட்டு இளேய புதல்வி நங்கையைச் சுகுணனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தார்.

மகாதேவ முதலியாருக்கு வரவர மூப்பு வந்து, வருவாய்கள் வராது ஒழிந்தன. கஷ்டஜீவனஞ் செய்துகொண்டிருந்தார்.

சுகுணன் தன் இனியமனேவி நங்கையுடன் புரசவாக்கத்தில் தனது வீட்டில் புதுக்குடித்தனம் செய்து வந்தான். ஐகோர்ட்டில் ஒரு வக்கீல் குமாஸ்தாவாக வேலே பார்த்தான். சம்பளம் மாதம் அறுபது ரூபாய்தான் கிடைத்தது. அதைக் கொண்டு செட்டாகச் சிரமமின்றி குடும்பத்தை நடாத்திஞன். ஆடம்பரமான பவுடர், சோப்பு, ரிப்பன், வாஸ்லேன் முதலிய சாமான்களே விரும்பாமல் வாழ்க்கைக்கு இன்றியமையாது தேவைப்பட்டவைகளே மட்டும் வாங்கி பசியில்லாமல் உண்டு, டம்பமான ஆடைகளே விரும்பாமல் எளிய உடைகளேயே உடுத்து கணவனும் மனேவியும் காதலுடன் கருத்து ஒருமித்து வாழ்ந்தார்கள்.

மூன்று ஆண்டுகள் கவலேயின்றிக் கழிந்தன. நங்கை கருக்கொண்டு, தங்கச்சிலேபோல் ஒரு ஆண் மகவைப் பெற்றெடுத்தாள். குழந்தைக்குக் குமரவேல் என்று பேரிட்டார்கள்.

மலேரியா காய்ச்சலினுல் சுகுணன் பீடிக்கப்பட்டான். வர வர உடம்பு பலவீனமடைந்தது. காலத்தில் தன் எஜமானுடைய அலுவலகம் போய்ச் சேர முடியாமல் சில சமயம் காலந் தாழ்த்துப் போவான். குறித்த நேரத்தில் குறிப்பிட்ட வேலையைச் செய்து முடிக்க முடியாதும் திணறினுன். அதனுல் அந்த வக்கீல் ஒருநாள் அவனை யழைத்து "இனி நீ என்னிடம் இருந்து வேலை பார்க்கத் தகுதியற்றுவிட்டாய்; வேறு எங்காவது சுலபமான வேலை பார்த்துக்கொள்" என்று கூறி ஒரு மாத சம்பளம் அறுபது ருபாயைக் கையில் கொடுத்து அனுப்பிவிட்டார். இடி விழுந்ததுபோல் அவன் வாழ்வுக் கோட்டை இப்படி எதிர்பாராத வண்ணம் தகர்ந்துவிட்டது. மனைவியிடம் நடந்ததைக் கூறி வருந்திஞன்.

அவள் "பிராணபதி! "இடுக்கண் வருங்கால் நகுக" என்பார் திருவள்ளுவர். ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம். "முட்ட முட்டப் பஞ்சமே யானும் பாரம் அவனுக்கன்றே". படைத்தவன் பரதவிக்க விடமாட்டான். அப்படியே விட்டாலும் அவனை நாம் விடப் போவதில்லை.

"இடர்களையா ரேனும் எமக் கிரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும்—சுடர்உருவில்
என்பருக் கோலத் தெரியாடும் எம்மானுர்க்கு
அன்பருது என் நெஞ்சு அவர்க்கு."

என்ற காரைக்கால் அம்மையின் கனிமதுரத் திருவாக்கு நமக்கு வழி காட்டுகின்றது. குகனுண்டு குறையில்லை; சுகமும் துக்கமும் மாறிமாறி வருவது இயற்கைதானே. உலகமே இரட்டையாகத்தான் அமைந்திருக்கின்றது. இரவு பகல்; வெயில், நிழல்; வெப்பம், தட்பம்; இன்பம் துன்பம்; போக்கு, வரவு; லாபம், நஷ்டம்; வெகுமதி, அவமதி; இருள், ஒளி; பள்ளம், மேடு; இறப்பு, பிறப்பு; இப்படியே தான் எல்லாம் துவந்துவமாகக் காட்சி தரு

இன்றன. ஆகவே தாங்கள் வருந்தற்க. நளனும் அரிச் சந்திரனும் ராமரும் தருமரும் எத்தனைத் துன்பம் அநுப வித்தார்கள். நமக்கு ஒன்றும் அத்தனைத் துன்பத்தை ஆண்டவன் தரவில்லை'' என்ற அமுத மொழிகளால் சுகுணனுடைய மனக்கவலையை மாற்றினுள். வரவர உணவுக்கும் உடைக்கும் இடர்ப்பட்டான் சுகுணன். கவலைக்கு நடுவில் நங்கையின் அன்புதான் அவனுக்கு ஆறுதல் அளித்தது.

★ ★ ★

திடீரென்று ஒரு நாள் சுகுணனைக் காணவில்லை. சுகுணன் எங்கே போனுன் என்று நங்கை அறியாது வருந்தினுள். "கணவருக்கு என்ன ஆபத்து நேர்ந்ததோ? உயிருடன் இருக்கின்ருரோ? கடலில் விழுந்து விட்டாரோ? ஏதாவது வண்டியில் சிக்கி மாய்ந்தனரோ? தற்கொலை புரிந்துகொண்டாரோ?'' என்று பலவாறு சிந்தித்துக் கண்ணீர் வடித்தாள். வீட்டிலுள்ள பித்தளைப் பாத்திரங்களையும் வேறு பல சாதனங்களையும் விற்று விற்றுக் கால் வயிறு கஞ்சி குடித்து வந்தாள். வறுமைக்கு இடையில் குழந்தை குமரவேல் வளர்ந்து வந்தான்.

இந்த வறுமையாகிய தீயின் மேல் கிடந்து நெளியும் நீள் புழுவாக நங்கை நாளும் மெலிந்தும், ஞான பண்டிதனுடைய நற்ருமரைப்பதத்தை மறவாமல் சிந்திப்பாள். கண்ணீர் ஆருய்ப் பெருகத் தன்னை மறந்து பாடுவாள்.

"சரண கமலாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதியானம் வைக்க அறியாத
சடகசட மூடமட்டி பவவினையிலே சனித்த
தமியன் மிடியால் மயக்க முறுவேனே?''

என்று பாடும்போது அவள் மூர்ச்சித்து விடுவாள்.

"முருகா! நின் திருவுள்ளம் எப்படியோ அப்படியாகட்டும். இன்னும் என்ன என்ன சோதனை செய்ய வேணுமோ அவ்வளவுஞ் செய். ஆனால், என் கணவனை மட்டும் என்னிடத்தில் சேர்த்து வை. அவர் உயிருக்கு ஆபத்து வந்தால் உன்னைச் சும்மா விடமாட்டேன். உன் மீது வழக்குத் தொடுப்பேன். நீ செய்யும் இந்த இரக்கமற்ற, சோதனையை என் தாய் வள்ளியிடம் கூறுவேன். அவள் கேட்டால் பொறுக்க மாட்டாள். என் அன்னை கருணையே வடிவானவள். பெண்ணாகிய என் துன்பத்தைக் கண்டு என் தாய் பொறுப்பாளா? கருணைக் கடலே! பொன்னை உருக்கித் தட்டி இழுத்துத் தேய்த்துப் பலவாறு அதை இம்சித்தால் தானே அது ஆபரணமாகும். அது போல் என்னை வாட்டி வருத்தி வதைத்து சிதைத்து ஆட்கொள்வாய் போலும். அடித்தாலும் உன் பாதமே கதி; அணைத்தாலும் உன் பாதமே கதி. என் ஆவி ஆக்கை யாவும் உன்னுடையதுதானே. "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" ஞான பண்டிதா! கதிர்வேலா! உன் திருவுளம்போல் செய்" என்று கண்ணீர் பெருக்கி உள்ளம் உருக முருகனிடம் முறையிடுவாள்.

மகன் குமரவேல், "அம்மா! அப்பா எங்கே?" என்று கேட்பான். அவனுக்கு அவள் என்ன பதில் கூறுவாள்? "மகனே! அப்பா வெளியே போயிருக்கின்றார். உனக்கு நிரம்ப பட்சணம் வாங்கிக்கொண்டு வருவார். அழாதே" என்று கூறித் தேற்றுவாள்.

அன்று கிருத்திகை. நங்கை தன் மகனை எடுத்துக் கொண்டு கந்தசாமி கோயிலுக்குப் போய் மும்முறை வலம் வந்து வணங்கி கண்கள் பெற்ற பயனாகக் கந்தப் பெருமானைக் கண்டு, நெஞ்சார நினைத்து, ஆண்டவனிடம் தனது கணவன் சுகமாக வந்து சேரவேண்டும் என்று

வேண்டிக்கொண்டு திரும்பினுள். ஆனைகவுனியருகே மகனை இடுப்பில் வைத்துக் கொண்டு நங்கை நடந்து போகின்ருள்.

மங்கை தன் கணவனுடன் காரில் அங்கு தற்செயலாக வந்தாள். தன் தங்கையின் எளிய நிலையைப் பார்த்து நகைத்தாள். காரை நிறுத்தி அவளை அழைத்தாள். நங்கை நாணத்துடன் அவளை நோக்கினுள்.

"ஏண்டி! இப்போதாவது உணர்கின்ருயா? கடவுள் கடவுள் என்று கடவுளைக் கட்டியழுதனையே; அந்தக் கடவுள் இப்படி உன்னைக் கதிகலங்க விட்டிருக்கின்றது. கண்கூடாகக் 'கண்டனையா? என்னைப் பார்; பரமசுகத்தில் ஒரு குறையுமின்றி இருக்கிறேன். கடவுள் என்னை என்ன செய்துவிட்டது? கடவுள் என்பது கற்பனையடி. சுத்த மடையர்கள் கட்டிய கட்டுக் கோப்பு. தெரிகின்றதா?"

"அக்கா! வேண்டாம். இவ்வாறு வாய்மதம் பேசாதே. நான் அநுபவிக்கும் துன்பத்திற்கும் கடவுளுக்கும் சம்பந்தமே இல்லை. நான் முன் செய்த வினையை இப்போது அனுபவிக்கின்றேன். கடவுள் அவரவர்கள் செய்த வினையின் பயனையே அவரவர்கட்கு அந்தந்தக் காலத்தில் ஊட்டுவர். ஆனுல் கோடி காக்கைகளேனும் ஒரு கல்லிற்கு முன் நிற்காது. அதுபோல் தீவிரமான பக்தருக்கு வினையை நீருக்கிப் பரமன் தண்ணருள் புரிவான். நாம் கடவுளை வணங்கும்போதே கடவுள் நமக்கு நன்மை செய்யவில்லையே என்று எண்ணுவது தவறு. விதை நட்டவுடனே முளைத்து மரமாகிப் பூத்துக் காய்த்துக் கனிகளைத் தராது. படிப் படியாகத்தான் வளர்ந்து பயன் தரும். நீ தெய்வ சிந்தனை செய்ததனுல், தெய்வம் உடனே உன்மேல் சீறிக் கெடுத்துவிடாது. அப்படி சீறுமானுல் அது கடவுளாகாது. காந்தியைச் சுட்டவனை

உடனே அப்படியே அரசாங்கம் கொன்றுவிடவில்லை. நீண்டநாள் வைத்து விசாரித்துத்தான் தண்டித்தது. அதுபோல் தெய்வ நீதி உடனே உனக்குத் தண்டனை விதிக்காது. காலாந்தரத்தில் நீ இதனை அநுபவிப்பாய். நெருப்பை விழுங்கியவன் கரியைக் கக்குவான். நான் கூறியதை நீ ஒரு காலம் உணர்வாய்'' என்று கூறிவிட்டு நிற்காமல் விரைவாக நடந்தாள்.

★ ★ ★

டாக்டர் R. G. தரனிடம் ஒரு சினிமா நட்சத்திரம் சிகிச்சைக்காக வந்தாள். டாக்டர் அவளை அன்புடன் வரவேற்று அவளுடைய நோயை ஆராய்ந்து தக்க மருந்துகளைத் தந்தார். அவளுடைய தோற்றம், அலங்காரம், வசீகரம் ஆகியவைகளில் அவர் தேனுண்ட வண்டு போல் மயங்கிவிட்டார். அவளுக்கும் அவருக்கும் நட்பு ஏற்பட்டுவிட்டது. அவளைத் தனது உயிராகவே எண்ணி விட்டார். இதனை யறிந்த மங்கை அவரைப் பலமாகக் கண்டித்தாள். அவர் ''கழுதை! நீ என்ன என்னை அதிகாரம் பண்ணுகின்றாய்? நான் ஆயிரம் பேரை விரும்புவேன். உனக்கென்ன? மரியாதையாக இருந்தால் இரு. இல்லையேல் உதைபட்டுச் சாவாய். ஒரு டோஸ் மருந்திலே நீ எமபுரம் போய்ச் சேர்ந்து விடுவாய், தெரியுமா?'' என்றார்.

''நான் ஜீவனாம்சத்திற்கு வழக்குத் தொடுப்பேன்'' என்றாள் மங்கை. அவளை அவர் காலாலும் கையாலும் உதைத்தும் குத்தியும் அடக்கினார். பிறகு அந்த நட்சத்திரத்தின் மாயவலைப்பட்டு தன் சொத்து பூராவையும் அவள் பேருக்கே எழுதி வைத்துவிட்டார்.

ஆறுமாதம் சென்றது. முன் மனைவியைப் பலதரம் காலால் உதைத்த பாவம் காரணமாக டாக்டர் R.G. தர

னுக்குப் பட்சவாதம் வந்துவிட்டது. இதுதான் சமயம் என்று அவரையும் மங்கையையும் அப் பாதகி வீட்டை விட்டு வெளியேற்றி விட்டாள். அவருக்கு ஏற்பட்ட வியாதியினுல் தொழிலும் போய், சொத்தும் போய் ஒரு சிறு வீட்டில் குடியேறி நகைகளை விற்று விற்று வயித்தியஞ் செய்தாள். அது தீராத வியாதியாக வாட்டியது.

மங்கை தன் தங்கையை அன்று பேசியதையும் அவள் கூறிய பதிலையும் எண்ணி எண்ணி ஏங்கினுள். தனக்கு இப்படி வரும் என்று அவள் கனவிலுங் கருத வில்லை. சிந்தாகுலமுற்று சிறகொடிந்த பறவை போல் துடித்தாள். வல்வினை யென்பது ஒன்று அலாதியாக இருந்து வேலை செய்வதாக உணர்ந்தாள். எல்லாம் வினையின்படியே நடக்கும் என்பதையும் அறிந்தாள். செய்வது இன்னது என்று அறியாது திகைத்தாள், நகைகள் முழுவதும் காலியாகிவிட்டதனுல் நிர்க்கதியாகிவிட்டாள். செருக்கு முற்றும் அடங்கி அங்கும் இங்கும் அலைந்து யாசிக்கலானுள்.

நங்கைக்கு ஒரு நாள் ஒரு கடிதமும் இருநூறு ரூபாய் மணியார்டரும் வந்தன. கடிதத்தைப் பிரித்துப் படித்தாள்

..................................................கோலாலம்பூர்.

என் அன்புள்ள நங்கை!

முருகன் கருணை முன்னின்று உனக்குத் துணைபுரிவதாக. நலம்.

நான் வறுமையின் கொடுமையினுல் உன்னைப் பிரிந்து இங்கு வந்தேன். இங்கு ஒரு ரப்பர் தோட்ட முதலாளி உள்ளார். அவர் பேர் தலைச் சிங்கம்; இலங்கை வாசி; அவரிடம் வேலைக்கு அமர்ந்திருக்கின்றேன். அவர் என்னைப் பெற்ற பிதாவைப்போல் ஆதரிக்கின்ருர். மாதம் இரு

நூறு ரூபாய் தருகின்றார். உனக்குச் செலவுக்குப் பணம் அனுப்பியிருக்கின்றேன். நீ கஷ்டப்படாமல் வேண்டிய சவுகரியங்களைச் செய்துகொள். மாமாவுக்குக் கொஞ்சம் பணம் கொடுத்து உதவி செய். சில காலம் பொறுத்து அங்கு வருவேன். கவலைப் படாதே. குழந்தையைப் பார்த்துக் கொள். திருவருள் துணை. அன்புள்ள

சுகுணன்.

இதைப் படித்த உடன் நங்கைக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையே கிடையாது. கோபாலபுரத்திற்குச் சென்று தாய் தந்தையிடம் தகவலைக் கூறி ஐம்பது ரூபாய் தந்தாள். முருகனுடைய கருணையை நினைந்து நினைந்து வாழ்த்தினாள்.

"முருகா! உன் கருணை நம்பியவர்களை ஒருபோதும் கை விடாது. சுவாமி! என் கணவன் சுகமே வந்து சேரக் கருணை செய். என்னாண்டவனே! உன் கருணையே கருணை" என்று துதித்தாள்.

சுகுணன் கோலாலம்பூரில் முதலாளியிடம் ஒழுங்காக வேலை பார்த்து வந்தான். அவர் வயோதிகர். வேறு அவருக்கு உறவினர் இல்லை. மக்களும் இல்லை. பெரிய ரப்பர் தோட்டத்திற்கு அதிகாரி. ஆயிரக்கணக்கான பேர்கள் அவரிடம் வேலை பார்த்து வந்தார்கள். அவருக்கு உடம்பில் நல்ல உதிரமில்லையென்று டாக்டர் கூற நல்ல உதிரந் தருபவர்க்கு நிரம்பப் பொருள் தரப்படும் என்று எழுதிய பலகை அவர் வீட்டில் தொங்கவிடப்பட்டிருந்தது. அதைக் கண்டு உதிரங் கொடுக்கச் சுகுணன் உடன்பட்டான். அதனால் அவருக்கு உடம்பு குணமுற்றது. சுகுணனைத் தன்னிடமே வேலைக்கு வைத்துக் கொண்டார். அவனுடைய அடக்கம், தூய்மை, வாய்மை, பொறுமை, சீலம் ஆகிய நற்குணங்களைக்

கண்டு அவர் அவனைப் பரிபூரணமாக நேசித்தார். அவனைத் தனது அபிமான புத்திரனாகவே கருதினார்: மூன்று ஆண்டுகளுக்குப் பின் அவர் உடல் நலங் குன்றி மரணப் படுக்கையில் கிடந்தார். தனது சொத்து முழுவதையும் சுகுணனுக்கே சாசனம் எழுதிப் பதிவு செய்து விட்டுச் சாந்தியடைந்தார்.

இவ்வாறு திடீர் என்று பெரும் பொருள் சுகுணனுக்கு ஆண்டவன் அருளால் கிடைத்துவிட்டது. தகுதியும் உண்மையும் உள்ள ஒருவனை அங்கு ரப்பர் தோட்டத்தை கவனித்துக்கொள்ளுமாறு ஏற்பாடு செய்துவிட்டு நிரம்பப் பொருளுடன் இந்தியாவுக்கு வந்தான்.

கணவனைக் கண்ட நங்கை சென்ற உயிர் திரும்பியது போல் மகிழ்ந்தாள். உயர்ந்த பங்களா, சிறந்த கார், ஆடை ஆபரணம், தோட்டம்,வயல், வண்டி, மாடு முதலியவைகள் வாங்கினர்.

இந்திரபோகத்தில் நங்கை நாயகனுடன் வாழ்ந்தாள். பெருவாழ்வில் வாழ்கின்ற அவள் கந்தக் கடவுளை மறந்தாளில்லை. வாழ்வினால் மதிமயங்கவுமில்லை.

ஒருநாள் கணவனுடனும் மகன் குமரவேலுடனும் காரில் கந்தசாமி கோயிலுக்குப் போகும்போது, ஆனை கவுனி ரோடில் ஒருத்தி நின்று “ஐயா! இந்த முடவனுக்கு ஏதாவது கொடுங்கள்; ஐயா! ஐயா!” என்று பிச்சை எடுக்கப் பார்த்தாள். காரை நிறுத்தி அந்த முடவனையும் அவன் மனைவியையும் காரில் ஏற்றிக்கொண்டு கோயிலுக்குப் போய் ஆண்டவனை வணங்கிவிட்டு தனது மாளிகைக்கு வந்து, அந்த இருவருக்கும் உயர்ந்த உணவும் உடையும் கொடுத்து உபசரித்தாள். அவர்கட்குத் தனி வீடு தந்து எல்லா அனுகூலங்களையும் செய்தாள்,

எந்த இடத்திலே தங்கையைக் காரில் இருந்து நிறுத்தினாளோ அதே இடத்தில் தான் இடர்ப்பட நேர்ந்ததையும், தான் தங்கையை அன்று அவமதித்ததுபோல் இன்று தங்கை தன்னை அவமதிக்காது வெகுமதி செய்து காப்பாற்றுவதையும், இளமையில் தான் அவளுக்குச் செய்த இன்னல்களையும், ''கடவுளை நம்பினோர் கைவிடப்படார்'' என்ற முதுமொழியின் உண்மையையும், தெய்வத் திருவருளின் உயர்வையும் எண்ணி எண்ணி மங்கை மனம் உருகினாள். தனது குற்றங்களை மன்னிக்குமாறு தங்கையிடம் முறையிட்டாள்.

நங்கை, ''அக்கா! கடவுளிடம் முறையிடு. மன்னிக்கவும் தண்டிக்கவும் அவரே வல்லவர். அவருக்கு அவை உரியன'' என்று கூறினாள். டாக்கர் R.G. தரனுக்குச் சிறந்த சிகிச்சைக்கு ஏற்பாடு செய்து அவன் உடல் நோயைப் போக்கினாள்.

நாளும் நல்லறங்கள் பல புரிந்து, மக்கட்குப் பலப்பல சேவைகள் செய்து பெருமான் கருணையால் நங்கை நல் வாழ்வில் வாழ்ந்தாள்.



# அழகம்மை

ஒரு நல்ல பொருளைக் கண்டால் நமக்கு ஒரு மகிழ்ச்சி ஏற்படுகின்றது. அப் பொருளைச் செய்தவனுக்கும் தனக்குள் ஒரு திருப்தி யேற்படுகின்றது. அழகம்மையைப் படைத்த பின் பிரமதேவருக்கே தான் ஒரு சிறந்த சிருஷ்டி செய்ததாக திருப்தியும் மகிழ்ச்சியும் ஏற்பட்டன. அழகின் பிழம்புபோல் விளங்கினாள் அழகம்மை. அவளைக் கண்ட பெண்களுங் காமுறுவர். சிலரிடம் அழகு அமையும்; அறிவும் அன்பும் அமையா. சிலரிடம் அறிவும் அன்பும் அமையும்; அழகு அமையாது. எட்டிப் பழம் பளபளவென்றும் நல்ல நிறத்துடனும் மிக்க அழகாக இருக்கும்; ஆனால் கசக்கும். கொழிஞ்சிப் பழம் பார்க்க அழகாக இருக்கும்; புளிக்கும். மிளகாப் பழம் சிவப்பாகக் கண்ணைப் பறிக்கிறப்போல் திகழும்; ஆனால் தின்ன முடியாது. பலாப்பழம் அழகாயிராது; இனிக்கும். நாவல் பழங் கருப்பாக இருக்கினும் சுவை யுண்டு. அழகும் சுவையும் ஒருங்கே அமைவது ஏகதேச மாகவிருக்கும். ஆரஞ்சிப் பழம் அழகும் சுவையும் ஒருங்கே கொண்டது. அதுபோல் அழகம்மையிடம் அழகு, அன்பு, அறிவு, அமைதி முதலிய எல்லாம் ஒருங்கே அமைந்திருந்தன.

மேலும் சிலரிடத்தில் தொடக்கத்தில் நற்குணமிருந்து வயது செல்லச் செல்ல நற்குணம் மாறி துர்க்குண ்மற் படும். சிலர் இளமையில் முரட்டுக் குணமும் அடங்காத துஷ்டத்தனமும் படைத்தவராக இருந்து பின்னர் நற்குண சீலராகத் திகழ்கின்றனர். நுங்கு, வெள்ளரி முதலியவை பிஞ்சில் இனிமையாக இருக்கும்; முற்றிவிட்டால் சுகப் படாது. மாங்காய் தொடக்கத்தில் புளிக்கும்; பழுத்தால் இனிக்கும். தேங்காய் வழுக்கையும் இனிக்கும்; முற்றி னாலும் இனிக்கும். அது போல் அழகம்மை இளமை யிலும் நற்குணம் அமைந்தவள்; வயது ஏறிய பின்னும் நற்குணம் அமைந்தவள். என்றும் ஒரு படித்தாகிய சுகுணமுடைய அழகம்மையை மனைவியாகப் பெற்ற அமரேசனுடைய புண்ணியத்தை வியவாதார் யாவர்? அவனே பாக்கியவான். அவன் உள்ளம் சதா மகிழ்ச்சி யால் பூரிக்கும். இத்தகைய அழகம்மை தன் கணவ னுடன் இல்லறத்தை இனிது நடத்தி வந்தாள். அவர்கள் வாழ்வில் ஒவ்வொரு நாளும் புதிய புதிய இன்பத்தேன் ஊறியது. அன்புப் பயிர் தழைத்தது. பண்பு மலர் மலர்ந்தது. அறக்கதிர் தோன்றியது. வானவருங்கூட அவர்கள் வாழ்வைக்கண்டு பொறுமை யுற்றனர். அவர் களுக்குள் கருத்து வேற்றுமை எந்த விஷயத்திலும் அணு வளவும் ஏற்பட்டதில்லை. தெய்வீக வாழ்வாக அமைந்தது. ஒருவரையொருவர் எப்போதும் அன்பு பாராட்டி அக மகிழ்ந்தனர். அகமலர்ந்து அறம் புரிபவன் செல்வம் எப்படி நாள்தோறும் வற்றுது வளருமோ அப்படி அவர்கள் காதலும் வளர்ந்தது. கங்காநீரைப்போல் புனிதம் பொருந்திய அவர்கள் வாழ்க்கை இமயமலைபோல் கெம் பீரமாக விளங்கியது. ஜீவநதியின் நீர் ஓட்டம்போல் அவர்களது உள்ளத்தில் உணர்ச்சி தடையற்றதாகி இருந்தது.

ஒருநாள் அமரேசன் குடும்பகாரியமாக அடுத்த ஊர் சென்ருன். மாலைநேரம். அந்த நகரத்தையாளும் மன்னவனுடைய மந்திரி மதிவாணன் தனது சிறந்த புரவியின் மீது ஊர்ந்து வீதியில் சென்றுகொண்டிருந்தான். அத் தருணம் அழகம்மை தன் வீட்டிற்கு முன்னின்று "அம்மா பிச்சை" என்ற ஒரு ஏழைக்கு அன்னங் கொண்டுவந்து பிக்ஷாபாத்திரத்தில் இட்டுக்கொண்டிருந்தனள். அன்ன பூரணி போல் விளங்கிய அவளுடைய அதியற்புதமான அழகிய காட்சியைக் கண்ட அமைச்சன் அறிவிழந்தான். அவனுடைய உள்ளம் சுழன்றது. அரமகளோ? வர மகளோ? என்று ஐயுற்று நின்ருன். அழகம்மை அதிதிக்கு அன்னமிட்டு உள்ளே சென்றனள். அவள் கால் நிலந் தோய்வதைக் கண்டு நரமகள் என்று தெளிந்தான். அவளைப் படைத்த அயனுடைய அறிவின் திறத்தைப் பாராட்டினன். அவளை இன்னுள் என்று அருகில் நின்ருர் மூலம் உணர்ந்தான். தன் மாளிகை சென்ருன். ஒன்றுமே தோன்ருதவனுகி நின்ருன். பித்தம் பிடித்தவனைப்போல் மேலுங் கீழும் பார்த்தான். அவளை அடையும் வழி யாது என்று சிந்தித்தான். ஒரு கடிதம் எழுதி தனது அந்தரங்க ஆளிடங் கொடுத்தனுப்பினுன். அக்கடிதத்தை அவன் கொணர்ந்து அழகம்மையிடம் கொடுத்து நின்ருன். அழகம்மை யதனை வாங்கிப் படித்தனள்.

கட்டழகுடைய காரிகையே !

இன்று மாலை நான் நீ வசிக்கும் வீதி வழியே செல்ல நேர்ந்தது. அப்பொழுது உன்னைக் காணும் பேறு கிடைத்தது. உன்னைக் கண்டது முதல் என் உள்ளம், உணர்ச்சி யாவும் உன்னிடம் வந்துவிட்டன. வெறும் உடம்பு மட்டுந் தான் என்னிடமுள்ளது. நான் இந்த நகரத்தை யாளும் மன்னனுடைய மந்திரி. என்னை நீ

யடைந்தால் எல்லா நலங்களையும் பெறலாம். என்னுடைய நட்பு உனக்கு மிகுந்த சுகத்தைத் தரும். நான் உன்னை விரும்பியது நீ பல பிறப் புக்களில் செய்த தவத்தின் பயன். ஆதலால் உனது உடன்பாட்டை எதிர்பார்க்கிறேன். இந்த நல்ல அதிர்ஷ்டத்தை இழந்துவிட மாட்டாய் என்று முழுமனதுடன் நம்பியுளேன்.

இப்படிக்கு,
உனது அன்பை நாடும்,
மதிவாணன்.
அமைச்சன்.

இதைக் கண்ட அழகம்மை நடுநடுங்கினாள். உடம்பு வேர்த்தது. முருகனை நினைத்துச் சிறிது தேறுதலுற்றாள். ஒரு கடிதம் எடுத்தெழுதி அந்த ஆளிடங் கொடுத்தனுப் பினாள். அதனை அமைச்சன் படித்து ஏமாந்து நின்றான். அது வருமாறு.

அமைச்சரே!

வணக்கம். நான் பிறனுடைய தருமபத்தினி. நீதியையுணர்ந்து வழங்குந் தாங்களே நீதிக்கு மாறாக நடந்தால் உலகில் நீதி எப்படி நிலை பெறும்? வேலியே பயிரை மேய்ந்தால் பயிருக்கு ஆதரவு ஏது?

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து"

என்ற பொதுமறையின் பொன் மொழியை யுணர்ந்து உய்வீராக. பாவங்களுக்கெல்லாந் தலையாய பாவம் பிறன்மனை நயத்தல். இது

கயவர் செயல். நரகிற்கு வழி தேடாதீர். ஈடேற வேண்டு மென்று எண்ணமில்லாதவன்தான் இந்தத் தீய நடையை அநுசரிப்பான்.

“போதந் தனங் கல்வி பொன்றவரும் போதிலயல்
மாதர்மேல் வைப்பார் மனம்”

என்ற அறவுரையைக் கடைப்பிடித் தொழுகுவீர். பிறன் மனைவி விரும்புவோனுக்கு இம்மையில் இகழும் மறுமையில் நரகமும் தவருது வரும். பரதார சகோதரனுக இருப்பதைக் காட்டிலும் சிறந்த தவமில்லை. கடல் கலங்கினுலும் என் கற்புநிலை கலங்காது. காமத்தாலழிந்ததர் கணக்கிலர். இராவணன், கீசகன், நகுஷன், கிம்மீரன், சுந்தோபசுந்தர், புலோமன் முதலியவர்களின் வரிசையில் நீரும் ஒருவராகச் சேராதீர்.

இப்படிக்கு
உமது சகோதரி
அழகம்மை.

இந்த உபதேச மொழிகள் மதிவாணன் மனதில் பதியவில்லை. மணலில் பொழிந்த மழையாயிற்று. தனித்திருந்து சிந்தித்தான். மீளவும் ஒரு கடிதம் எழுதி யனுப்பினுன். அதை அழகம்மை படித்து மனம் பதைத்தாள்.

“காதலை வளர்க்குங் கண்மணி!

உன் கடிதங் கிடைத்தது. இந்த வேதாந்தத்தை யெல்லாம் விட்டுவிடு. நரகமாவது சுவர்க்கமாவது. அவற்றை யெல்லாம் யார் கண்டவர்கள்? கண்கண்ட சுகத்தை விட்டு விட்டு வீண் கலக்கமெய்தக் கூடாது. நான் மந்திரி யென்பதை நினைவில் வைத்துக்கொள்.

எனக்கு நீ அறிவு கூறலாமா? இக் கடிதங் கண்டதும் நீ இணங்கவில்லையாயின் நாளை உன் கணவன் தலை நிலைபெறாது. எச்சரிக்கை. வீணே உன் அதிர்ஷ்டத்தின் தலையில் மண்ணை வாரிப் போட்டுக் கொள்ளாதே. உன் சம்மதியை நாடுகிறேன்.

இப்படிக்கு
உனது உறவை விரும்பும்,
மதிவாணன்.

இவ்வசனங்களை இரண்டு மூன்று முறை படித்தாள்; உள்ளந் துடித்தாள்; கண்ணீர் வடித்தாள். கடிதங் கொணர்ந்தவனை நோக்கி, "கல்லைக் கடித்தால் பல் உடையும்" என்று கூறியனுப்பினாள். அதை அவன் மந்திரியிடங் கூற, மனங்கலங்கிய மந்திரி தனக்குள் பலப் பல சிந்தித்தான். ஒன்றுந் தோன்றாதவனாகிப் பித்துப் பிடித்தவன் போலாயினான். உள்ளும் வெளியும் இருட்டி விட்டன. அருகிலுள்ள நதிக் கரையில் உலாவலாயினான். நதிக்கரை யோரத்தில் ஒரு பிணம் மிதந்துகொண்டு வந்தது. அதைக் கண்டவுடன் ஒரு புதிய யோசனை தோன்றியது; அதை யிழுத்துக் கரையில் போட்டான். அமரேசன் கொலை செய்து நதியில் போட்டுவிட்டதாக ஒரு வழக்கு கற்பனை செய்து சாட்சி ஒருவனையும் தயாரித்துவிட்டான். அமரேசனை இதனால் ஒழித்துவிட்டால் அநாதையான அழகம்மையைத் தன் இஷ்டம்போல் அடையலாம் என்று மனப்பால் குடித்தான். சிறிதும் இரக்கமில்லாதவனும் பழிபாவத்திற்கு அஞ்சாதவனும், நற்குணமில்லாதவனுமாகிய அப் பாவி அப் பிணத்தை ஒரு புறத்தில் கிடத்தி வழக்குக்கு வேண்டிய ஏற்பாடுகள் யாவும் விடிவதற்குள் செய்துவிட்டான்.

பொழுதுவிடிந்தது. அன்றிரவெல்லாம் அழகம்மைக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. தீக்கனவுகள் கண்டாள். உள்ளம்நடுங்கி துன்புற்று வருந்தினுள். "எம்பெருமானே! வெற்றிவேலாயுதா! கருணைக்கடலே! கலிகாலத்தில் நல்லவர்களுக்குக் காலமில்லை. சாதுக்களுக்கு ஓயாத துன்பம். துஷ்டர்களுக்கும் பாவிகளுக்குந்தான் காலமாகிவிட்டது. பழநியப்பா! பரம தயாளா! உன்னையே நம்பியுள்ள எனக்கு இத்தகைய துன்பத்தைத் தரலாமா? என் இருதயமே வெடித்துவிடும்போல் இருக்கின்றதே. இன்னும் என்னைச் சோதிக்க வேண்டாம்" என்று கந்தவேளைக் கருதி உருகினுள். வெளியூர் சென்றிருந்த அமரேசன் வீடுதிரும்பினுன். மனைவியின் அழுமுகத்தைக் கண்டு திடுக்கிட்டான். "பெண்ணே! என்னசேதி? ஏன் உன்முகம் இப்படித் துன்ப மயமாக இருக்கின்றது? என்ன நடந்தது? சொல்" என்று பரிந்து வினவினுன்.

அழகம்மை கணவன் கால்மேல் வீழ்ந்து கண்ணீரினுல் அவன் கால்களைக் கழுவினுள். மந்திரி தன்னைக் கண்டதும், கடிதம் அனுப்பியதையுங் கூறி, "பிராணேசா! அந்தப்பாவி தங்கட்கு என்ன தீங்கு செய்வானே? அவனுக்கு அதிகாரமும் ஆள்களும் நிரம்ப இருக்கின்றனவே? என்னுல் தங்கட்குப் பெருந்துன்பம்; பாவியாகிய நான் என்செய்வேன்" என்று புலம்பினுள். அமரேசன் "பெண்ணே! இன்பதுன்பம் மாறிமாறி வருவது உலகியற்கை. "திங்களும் முறை முறை வளருந் தேயுமால்" நளன், அரிச்சந்திரன், தமயந்தி, சந்திரமதிமுதலிய புண்ணியமூர்த்திகள் அநுபவித்த துன்பங்களை அளவிட்டால் கடலினும் பெரிதன்றோ? முருகனுடைய கருணையிருக்கும்போது நமக்கு ஒரு குறையும் நேராது. கவலைப்படாதே" என்று ஆறுதலும் தேறுதலுங் கூறினுன்.

காலை மணி பதினொன்று இருக்கும். அரச சேவகர்கள் வந்து அமரேசனை விலங்கு பூட்டி அழைத்தேகினர். அழகம்மை அதுகண்டு 'கோகோ' என்று கதறியழுதாள். செய்வது இன்னதென்று அறியாது திகைத்தாள். "முருகா! முருகா !" என்று கூவினாள். அவளுடைய ஆற்றொணாத அலக்கணைக் கண்ட அனைவரும் இரங்கினார்கள்.

அரசனுக்கு முன் அமரேசனைக் கூண்டில் ஏற்றி விசாரிக்கப்பட்டது. மந்திரியின் சூழ்ச்சியாலும், பொய்ச் சாட்சியின் சொல்லாட்சியாலும் அமரேசன் கொலைக் குற்றவாளி என்று தீர்மானிக்கப்பட்டது. அரசன் அமரேசனை நோக்கி, "உனது வாக்குமூலம் யாது?" என்று கேட்டான். அமரேசன் "கருணை மிகுந்த காவலரே! உள்ளும் புறமும், கீழும் மேலும், உயிர்தொறும் கலந்து சர்வஜீவ சாட்சியாக உள்ள வள்ளலுக்கே தெரியும்" என்று உயிர் உருகக் கூறினான். அந்த நேரத்தில் மந்திரி' "மன்னர் பெருமானே! இவன் குற்றவாளி என்பதை இவன் சொல்லே உணர்த்துகின்றது; நேற்று இவன் ஊரில் இல்லாததும் அதற்கு ஒரு காரணம். குற்றஞ் செய்தவன் நேர்முகத்தில் ஒப்புக்கொள்வது என்பது எங்காவது உண்டா? சாட்சிகளாலும் குற்றம் உறுதிப்படுகின்றது. எனவே இவன் தண்டனைக்குரியவன் என்பதில் சிறிதும் ஐயமின்று" என்றான். மன்னன் அமரேசனை உற்று நோக்கி அவனுடைய முகமும் சொல்லும் மாசற்று விளங்குவதை யுணர்ந்தான். என் செய்வதென ஏங்கினான். "மந்திரீ! இந்த வழக்கு என்னால் நிச்சயிக்க முடியவில்லை. இதைத் தெய்வத்தினிடம் ஒப்புவிக்கின்றேன். 'மரணம்' 'வாழ்வு' என்ற இரு சீட்டெழுதி ஒரு குடத்திலிட்டுக் குலுக்கி இவனைக் கொண்டு அதில் ஒன்றை எடுக்கச் செய்வோம். மரணச்சீட்டு எடுக்கப்பட்டால் தூக்கிலிடுவோம். 'வாழ்வு' என்ற சீட்டு எடுக்கப்பட்டால் விடுதலை செய்து விடு

வோம். இப்படித் திருவுளத்தின்படி இதை நடத்துவது என்று நான் தீர்மானிக்கின்றேன். அது நாளை காலையில் செய்வோம். இன்றிரவு அது சம்பந்தமான ஆலோசனைக்குக் கழியட்டும்'' என்று கூறிச் சபையைக் கலைத்து விட்டான்.

அரசன் அரண்மனை சென்றான். மந்திரி தன் வீடுபோய் பெருங் கவலையடைந்தான். அவனுக்கு நிம்மதியில்லை. ஒருவேளை 'வாழ்வு' என்ற சீட்டு வந்துவிட்டால் நமது முயற்சி முழுவதும் விழலுக்கு இறைத்த நீராகிவிடுமே? எத்தனையோ விதமாக எடுத்துக்கூறியும் மன்னன் திருவுளச் சீட்டுபோட்டு அதன்படி நடப்போம் என்று முடித்தனனே. இனி தப்பாமல் அமரேசன் மாள்வதற்கு வழி என்ன என்று ஆராய்ந்து ஒருமுடிவுக்கு வந்தான். எழுந்தான்; ஏதோ புதையல் கண்டெடுத்தவனைப்போல் மகிழ்ந்தான். நேரே அரசனுடைய அருகில் இருப்பவனும் எழுத்துவேலை புரிபவனுமாகிய 'எழுத்தாளன்' வீடு போனான். எழுத்தாளன் மந்திரி தன் வீடு வந்ததைக் கண்டு அச்சமும் மதிப்புங் கொண்டு வரவேற்று ஆசனந் தந்து ''அமைச்சரே ! சொல்லியனுப்பியிருந்தால் நான் வரமாட்டேனா? என் வீட்டிற்குத் தாங்கள் வந்தது என் பாக்கியம்'' என்று உபசரித்தான். மந்திரி எழுத்தாளனை நோக்கி, ''அப்பா ! ஒரு பெரிய ரகசியம். ஒருவருக்கும் வெளியிடாதே. இன்றுமாலை வழக்கு நடந்ததே அந்தக் குற்றவாளி பரமதுஷ்டன். அவன் தப்பாமல் மரணமடைய வேண்டியவன். ஆதலால் நீ நாளை காலை அரசர் கட்டளைப்படி 'மரணம்' 'வாழ்வு' என்று இருசீட்டு எழுதும் போது இரண்டையும் 'மரணம்' என்றே எழுதிவிடு. எந்த சீட்டு எடுத்தாலும் மரணமாகவே இருக்கட்டும். எனக்காக இதனை இப்படி நீ செய். உனக்கு நான் பெரிய உபகாரம் புரிவேன்'' என்றான். எழுத்தாளன் ''அப்படியே

செய்வேன்" என்று ஒப்புக்கொண்டான். மந்திரி விடை பெற்றுக்கொண்டு அமரேசனுக்கு மரணஓலை வந்து விட்டதாகக் கருதி வீடு சென்முன். மந்திரி தமது வீடு வந்தது கண்டு அதிசயித்து மந்திரியும் தன் கணவனும் பேசியதை திரைமறைவில் நின்று எழுத்தாளன் மனைவி கேட்டுக்கொண்டிருந்தாள். மந்திரி போனபின் தன் கணவனிடம் விவரங் கேட்டாள். "பெண்ணே! ஒன்று மில்லை. இன்றுமாலை ஒருவழக்கில் ஒரு குற்றவாளிக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டது. அது நாளை திருவுளச் சீட்டுபோட்டு அதன்படி நடப்பதாக அரசர் முடிவுகட்டி ஞர். இரண்டையும் மரணமென்று எழுதுமாறு மந்திரி கூறினர். அப்படி எழுதினல் நிரம்ப உதவுவதாகக் கூறினர்" என்று விவரித்துக் கூறினன்.

கணவனை அரச சேவர்கள் அழைத்தேகிய பின் துன் பக் கடலில் வீழ்ந்து துள்ளித் துடித்த அழகம்மை திகைப் பூண்டு மிதித்தது போல் ஒன்றுந் தோன்ருது நின்ருள். எட்டுத் திக்குகளையும் மிரண்டு மிரண்டு பார்த்தாள். ஏது வருமோ? என்று ஏங்கினுள். அவள் உயிர் ஊச லாடியது. அந்த ஊர் முழுவதும் இதே பேச்சாக இருந் தது. பொழுது போனது. இராஜ சபையில் மரண தண் டனை விதித்ததையும், திருவுளச்சீட்டு எழுதிக் குலுக்கி அதன்படி நடப்பதாக அரசர் தீர்மானித்திருப்பதையும் தக்கார் வாயிலாக கேள்வியுற்ருள். ஒருவாறு உள்ளந் தேறினுள். திருவுளச் சீட்டு எழுதி அதன் படி நடப்பது என்ருல் ஆண்டவன் கருணையும் சத்தியமும் துணைபுரி யும். மரணச் சீட்டு வராது. நமது கணவர் ஒரு குற்ற மும் அறியாதவர்; எல்லாம் மந்திரியின் சூழ்ச்சி; தெய் வத் திருவருள் துணை புரியும். என்று கருதி ஆறுதல் அடைந்தாள். இரவு மணி ஏழு இருக்கும்; கிண்ணத்தில் நெய் எடுத்துக்கொண்டு அருகிலுள்ள முருகப்பெருமான் திருக்கோயிலுக்குப் போய் நெய் விளக்கிட்டு வலம்

வந்து ஐந்து அங்கங்களும் நிலத்தில் தோய வீழ்ந்து வணங்கி சந்நிதியில் நின்று எம்பெருமானை நோக்கி முறை யிட்டாள்.

"முருகநாதா! ஞானபோதா! கருணைக் கடலே! தேவர் சிறை மீட்ட மூவர் முதல்வா! பன்னிரு கண்க ளுடைய பரம தயாளா! என் கணவனைக் காப்பாற்று. அவர் குற்றமற்றவர் என்பது உன் திருவுளம் அறியாதா?" சீட்டுக்களைக் குலுக்கி எடுக்கும்போது நன்மையான சீட்டு வருமாறு தேவரீர் அருள் புரிய வேண்டும். நான் என்ன பாவம் புரிந்தேனோ ஆண்டவனே! என் வாழ் வின் தலையில் இடி விழுந்தது போன்ற இந்தப் பேராபத்து வந்து சேர்ந்ததே!

"திருமணியே மெய்ஞ்ஞானச் சிவமணியே மயிலேறி
வருமணியே வள்ளிமகிழ் மாமணியே மலைமகளென்
அருமணியே என அழைக்கும் அருள்மணியே அரனார்தங்
குருமணியே என்னுடைய கொழுநனுயிர் காத்தருள்வாய்''

என்று பாடி முறையிட்டனள். கண்ணீரால் அவள் உடம்பு நனைந்தது. ஆருத் துயரத்துடன் வெளிப் பிரகா ரம் வலம் வந்துகொண்டிருந்தாள். அங்கு ஒரு பெண் வேகமாக வலம் வரும்போது ஒரு கூர்மையான கண் ணாடித் துண்டு அவள் காலில் ஏறியது. அவள் துடித்து 'அம்மா' என்று கீழே விழுந்துவிட்டனள். அது கண்ட அழகம்மை தாய் போல் ஓடிப் பரிந்து அவளை எடுத்து அணைத்துக் காலில் தைத்த கண்ணாடித் துண்டைப் பிடுங்கி எடுத்தாள். உதிரம் பீரிட்டு வெளிப்பட்டது. அத னைத் தன் முன்றானையால் அழுத்திப் பிடித்து சிறிது நேரம் வரை பொறுத்து, பின் தனது முன்றானையில் சாண் கிழித் துக் காலில் கட்டி, ஓடி ஒரு வண்டி கொணர்ந்து அவளை எடுத்து அதில் ஏற்றிக்கொண்டு அவள் வீட்டிற்குக் கொண்டுபோவாளாயினள். காலில் புண்பட்ட அந்த அம்மை அழகம்மையை நோக்கி, "அம்மா! தாங்கள்

எனக்குச் செய்த மட்டற்ற இந்த உபகாரத்தை நான் ஒருபோதும் மறவேன். ஆயிரம் தாய்மார் ஒன்று கூடி யது போல் என்னை ஆதரித்தீர். ஆகா! என்ன தயாள சிந்தை! என்ன பரோபகாரம். கோயிலுக்கு வந்த இடத் தில் எனக்கு இவ்வளவு பெரிய துன்பம் வந்தது. நல்ல காரியத்திற்குப் போனல் பல இடையூறுகள் வருகின்றன. நல்லவர்கட்கு மேலும் மேலும் துன்பங்கள் வருகின்றன. ஆனல் அவை பொன்னைப் புடம் போடுவது போலாகும். சரித்திரத்தில் நாம் படிக்கும் புண்ணிய சீலர்கள் துன்பக் கடலில் மூழ்கி முடிவில் இன்புற்றவர்களாகவே காணப் படுகின்றனர். நளன், அரிச்சந்திரன், குமணன், பாண்ட வர் முதலிய புகழாளர்கள் வரலாறுகளை உற்று நோக் கினல் இது விளங்குகின்றது. என்னமோ எனக்கு இன்று வந்த இந்த ஆபத்து முருகன் கருணையாலும் உமது உதவியாலும் இந்த மட்டோடு நீங்கியது. ஆபத்து திடீர் என்று வருகின்றது. மனிதனுடைய வாழ்வு நிலை யற்றது. இதையெல்லாம் உலகம் கருதுவதில்லை. வாழ்வை நிலையாக நம்பி ஒருவரை ஒருவர் கெடுப்பதும் வஞ்சிப்பதும், கொலை செய்வதுமாகத் திரிகின்றனர். உதா ரணமாக இன்று ராஜசபையில் யாரோ ஒருவருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டதாம். அவர் பரம சாதுவாகக் காணப்படுகின்றாராம். திருவுளச் சீட்டு போட்டுக் குலுக்கி அதன்படி முடிவு செய்வதென்று அரசர் விதித்தனராம். என் கணவர் அரசருடைய எழுத்தாளர். மந்திரி என் கண வரிடம் வந்து இரண்டு சீட்டையும் 'மரணம்' என்றே எழு துமாறு வேண்டிக் கேட்டுக்கொண்டார். என் கணவ ரும் சரி என்று சொல்லியிருக்கின்றார். உலகில் நியாயா நியாயங் கிடையாது. எல்லாம் பொய்யும் புரட்டுமாக இருக்கின்றது. அம்மா! தாங்கள் எங்கிருப்பது? தங் கள் பேர் யாது? குணக்குன்று போன்ற தங்களை அடிக் கடி சந்தித்து மகிழ விரும்புகின்றேன்" என்றாள்.

இவ் வசனங்களைக் கேட்டதும் அழகம்மைக்கு தீராத் துயரமுண்டாகியது. தன் உள்ளத்துயரை வெளிக்குக் காட்டாமல் அறிவினுல் அடக்கிக் கொண்டார். 'அம்மா! எல்லாம் ஈசன் செயல். அவனன்றி ஓர் அணுவும் அசை யாது. நான் ஒன்றும் தங்கட்குப் பெரிய உதவி புரிய வில்லை. என் கடமையைத்தான் செய்தேன். ஒருவர்க் கொருவர் ஆபத்து நேரத்தில் உதவுவது உயிர்ப் பண்பு தானே? நான் ஒரு அபாக்கியவதி. என்னைப் பற்றி நீங் கள் சந்தர்ப்பம் வரும்போது தெரிந்துகொள்வீர்கள். இப்போது எனக்கு உடம்பு என்னமோபோல் இருக்கின் றது" என்று கூறி, அவளை அவள் வீட்டினருகில் விட்டு விட்டு விடைபெற்றுக்கொண்டு தன் வீடு சேர்ந்தாள். உள்ளமானது ஒரு வழியின்றிச் சுழன்றது. ஒரு சிறிது இருந்த நம்பிக்கையும் இழந்தாள், நிச்சயமாகத் தனது கணவனுக்கு மரணம் வரும் என்று கருதினுள். இரு சீட் டுக்களிலும் 'மரணம்' என்றிருக்குமானுல் எதை எடுத்தா லும் மரணந்தானே? பிழைக்க வழியில்லையே என்று வாடினுள். விடிவதற்குள் தன் உயிரை மாய்த்துக் கொள்வதென்று தீர்மானித்தாள். அவளைச் சுற்றிக் கண் ணீர் ஓடியது.

"முருகா! உன்னை இத்தனைக் காலமாக வழிபட்ட தன் பயன் இதுதானு? நம்பினவர்களைக் கைவிடுவது உன் கருணைக்கு அழகா? ஏ கருணுநிதீ! தேவரீர் திருவருள் இங்ஙனமிருக்கின் நான் என்ன செய்யமுடியும்? ஆனு லும் என்னை இப்படி சோதிக்கக் கூடாது. அருட்கடலே! என் கணவரும் நானும் மாண்டுபோகின்ருேம். நீரும் உமது மனைவிகளும் மகிழ்ச்சியுடன் வாழும்" என்று புலம்பினுள். இரவெல்லாம் பேய் பிடித்தவள்போல் அலறினுள். பொழுது புலர்கின்றது; இருள் நீங்குகின் றது. அவள் துன்பக் கண்ணீரைத் துடைக்க வருபவன் போல இளஞ் சூரியன் உதிக்கின்ருன். திடீர் என்று

அவள் உள்ளத்தில் ஒரு கருத்தைத் திருவருள் உதிக்கச் செய்தது. புதையல் கண்டெடுத்தவள் போல் மகிழ்ந் தாள். ஆடினுள், பாடினுள். துன்பத்தை உதறித்தள்ளி னுள். இன்புற்ருள். எழுந்தாள். நீராடினுள். முருகவேளே மனமுருகி வழிபட்டாள். காலே பத்து மணியிருக்கும். பாண்டியன் முன் ஒற்றைச் சிலம்புடன் சென்ற கண்ணகி தேவியைப்போல் அரசவை புகுந்தாள். கொலுமண்டபத் தில் சிங்காதனத்தில் அரசன் வீற்றிருந்தான். அருகில் அமைச்சன் மகிழ்ச்சியுடன் தன் எண்ணம் முற்றுப் பெற்று விட்டதாக எண்ணியிருந்தான். குற்றவாளிகள் இருக்கும் கூண்டில் நிலத்தைப் பார்த்த வண்ணமாக அமரேசனே நிறுத்தி வைத்திருந்தது. நியாயவாதிகள் முதலியவர்கள் தத்தம் இடங்களில் இருந்தனர்.

அழகம்மையைக் கண்ட அனைவரும் அவளை நேராக நிலவுலகிற்கு வந்த திருமகளோ என்று ஐயுற்றனர். கண் கள் இமையாது நோக்கினர். அழகம்மை அரசனைத் தொழுது நின்ருள்.

அரசன்:—அம்மா! தாங்கள் யார்? தனித்து அரசவைக்கு வந்த காரணம் யாது? தங்கள் குறை என்ன? கூறும்.

அழகம்மை:— கருணைவேந்தே! நீதி வழுவாத நிருபரே! உமது திருவடிக்குப் பல்கோடி வணக்கம். இதோ மரணயாத்திரையில் நிற்பவர் என் கணவர். நான் ஒரு அநாதை. தெய்வத்தைத் தவிர வேறு துணை யில்லாதவள். என் கணவர் குற்றமற்றவர். அவரை மரணதண்டனையிலிருந்து விடுவிக்க வேண்டும்.

அரசன்:— அம்மா! அவர் குற்றவாளி யென்று இங்கு பல சாட்சிகளால் உறுதி செய்யப்பட்டுளது. ஆனுல் என்னுல் நிச்சயிக்க முடியவில்லை. இந்த நெருக் கடியான வழக்கை தெய்வத்தின் தீர்ப்பில் விட்டு விட்டேன். இப்போது 'மரணம்' 'வாழ்வு' என்று

இரு சீட்டு எழுதி இதோ இந்தக் குடத்தில் போட்டு ளது. இதனைக் குலுக்கி ஒரு சீட்டை யெடுத்து கடவுள் சம்மதப்படி எந்த சீட்டு வருகின்றதோ அதன் படி தீர்ப்பு அளிக்கப்படும். இதில் என் சம்மதி யாதொன்று மில்லை.

[மந்திரி தனக்குள் 'எந்த சீட்டு எடுத்தாலும் மரணந்தானே? நிச்சயமாக அமரேசன் மடிவான். அழகம்மையை நாம் அடையலாம்' என்று சிந்தித்தான். எழுத்தாளன், 'மந்திரியின் பேச்சைக்கேட்டு இரண்டு சீட்டையும் மரணம் என்று எழுதியிருக்கின்றேமே? ஒருவேளை அரசர் அவற்றைத் தானே படித்துப் பார்த்துப் போடக் கருதிவிட்டால் என்ன செய்வது? என் உயிருக்கு ஆபத்து வந்துவிடுமே' என்று கலங்கிக்கொண்டிருந்தான்.]

அழகம்மை:— அரசர் பெருமானே! தங்கள் முடிவு நல்ல முடிவுதான். இதனை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் எனக்கு ஒரு வரம் தரல் வேண்டும்.

அரசன்:— அம்மா! என்ன வரம்? நியாயத்திற்கு மாறுபடாததாயின் தரத் தயார்.

அழகம்மை:— அரசரேறே! இந்தச் சீட்டை யார் எடுப்பது?

அரசன்:— அம்மா! குற்றவாளியாகிய உன் கணவனே.

அழகம்மை:— மன்னர் திலகமே! என் கணவர் வேறு நான் வேறு அன்று. அவர் உடம்பிற் பாதி நான். ஆதலினால் சீட்டை எடுக்கும் உரிமையை எனக்குத் தரவேண்டும். இந்த வரத்தைத்தான் நான் உம்மிடம் யாசிக்கிறேன். கேட்ட வரம் தரும் கிருபாகரராகிய தாங்கள் இதனை மறுக்கமாட்டீர்கள்.

அரசன்:— அம்மா! அப்படியே யாகட்டும். தாங்களே சீட்டை எடுக்கலாம்; அதனால் ஒன்றும் குற்றமில்லை.

அமரேசன் தன் மனைவியின் செயலைக் கண்டு என்ன நடக்குமோ; என்ன சீட்டு வருமோ; திருவருள் எப்படியோ என்று எண்ணிக் கந்தவேளைக் கருதிக் கலக்கத்துடன் நின்றான்.

பிறகு சீட்டெழுதிப் போட்டுள்ள குடத்தை ஒரு ஆளை விட்டு அரசன் குலுக்கி வைக்கச் சொன்னான். அரசன் அழகம்மையை ஒரு சீட்டை எடுக்குமாறு கட்டளையிட்டான். அழகம்மை தனக்குள் 'சீட்டை வெளிப்படுத்தினால் எழுத்தாளன் தலை போகும் நமது கணவன் விஷயத்தில் கருணை காட்டிய அந்த அம்மையின் கணவனைக் காப்பாற்றுவது நமது கடமை யன்றோ? ஆதலின் இருவரும் உயிர் பெறுவதற்குரிய உபாயத்தைச் செய்ய வேண்டுமென்று சிந்தனை செய்து சிறிதும் தயக்கமின்றி ஒரு சீட்டை எடுத்து வாயில் போட்டு மென்று தின்று விட்டாள். இதைக்கண்ட அரசன் முதலியோர் திடுக்கிட்டனர். சபையில் ஒரு பரபரப்பு உண்டாயிற்று.

அரசன்:— அம்மா! சீட்டை எடுத்துத் தருமாறுதானே நான் உனக்குக் கட்டளையிட்டேன். நீ எடுத்துத் தின்றுவிட்டனையே. காரணம் யாது?

அழகம்மை, "ஏ கருணைமலையே! இதில் உள்ள இரு சீட்டுக்களில் ஒன்றில் மரணம் என்றும் ஒன்றில் வாழ்வு என்றும் எழுதியிருக்கும். ஒரு வேளை நான் எடுத்தது மரணச் சீட்டாக வந்திருக்குமானால் அதைப் பார்க்க என் மனஞ் சகிக்காது. தவிர கணவனுக்கு மரணச்சீட்டை நானே எடுத்து என் கையால் கொடுத்த பாவமும் பழியும் வரும். நான் தின்ற சீட்டில் மரணம் என்று இருக்குமாயின் மரணத்தைத் தின்றுவிட்டேன். நான் தின்றுவிட்ட சீட்டில் 'மரணம்' என்றிருந்தால் குடத்தில் உள்ள சீட்டில் 'வாழ்வு' என்றிருக்கும். அல்லது நான் தின்றதில் 'வாழ்வு' என்றிருந்தால் குடத்தில் உள்ள சீட்டில் 'மரணம்' என்

றிருக்கும். ஆதலால் குடத்தில் உள்ள சீட்டைக்கொண்டு நான் தின்ற சீட்டை இன்ன சீட்டு என்று உறுதி செய்து கொள்ளும்'' என்றாள்.

அது கேட்ட அரசன் சரியென்று குடத்தில் உள்ள மற்றொரு சீட்டை எடுத்துப் பிரித்துப் பார்த்தான். அதில் 'மரணம்' என்றிருந்தது. அழகம்மை, ''அரசே! இதில் 'மரணம்' என்றிருப்பதால் நான் எடுத்து வாயில் போட்டுக்கொண்டது 'வாழ்வு' சீட்டுதான். அதில் அணு வளவும் சந்தேகமில்லை'' என்றாள். அரசனும் மற்றவர் களும் 'ஆம்' என்று ஒப்புக்கொண்டனர். அமரேசனை அரசன் விடுதலை புரிந்து 'சுகமாகப் போகலாம்' என்றான்.

மந்திரி, தான் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைத்தது குறித்து ஏமாந்து வருந்தினான். எழுத்தாளனும் திடுக்கிட்டுத் தன்னை மறந்து சிரித்தான். அது கண்ட அரசன் அவனை நோக்கி, 'ஏன் இப்போது நீ சிரித்தனை?' என்றான். எழுத்தாளன், ''அரசே! தெய்வத் திருவருளைச் சிந்திக்கும்போது எனக்குப் பெரிய ஆச்சரிய மேற்படுகின் றது. மந்திரியார் நேற்றிரவு என்னிடம் வந்து அமரேசன் தனக்கு ஆகாதவன் என்றும் இரண்டு சீட்டுக்களிலும் 'மர ணம்' என்று எழுதுமாறும் அப்படி எழுதினால் எனக்குப் பேருதவி புரிவதாகவும் கூறினார். நானும் ஒப்புக்கொண்டு இரண்டிலும் 'மரணம்' என்று எழுதினேன். ஆனால் திரு வருள் மாற்றிவிட்டது. இதனால் மனித முயற்சியால் ஒன் றும் நிகழாது. தெய்வத்தின் திருவருள்போல்தான் எல் லாம் நிகழும் என்பதைக் கண்கூடாகக் கண்டேன். அதை நினைத்து அடக்க முடியாமல் சிரிப்பு வந்தது' என்றான். அரசன் கேட்டு, ''மந்திரீ! நீ அப்படிச் செய்வதற்கு என்ன காரணம்?'' என்று சினந்து கேட்டான். மந்திரி ஒன்றும் கூறாது விழித்தான். அழகம்மை அரசனைப் பணிந்து, ''மன்னர் பெருமானே! என்னைக் கண்டு விரும்பி

இரு கடிதங்கள் எழுதினுர். அதற்கு நான் இணங்காமை யால் இந்தப் பெரும் வஞ்சனையைச் செய்தார். இவர் கையெழுத்திட்டுள்ள கடிதங்கள் இரண்டையும் இதோ பாரும்" என்று மந்திரியின் கடிதங்களைக் காட்டினுள். மன்னன் அவைகளைப் படித்ததும் ஆலகால விஷம் போல் சீறினுன். குற்றமற்றவனைக் கொன்று தான் பழி பாவத் திற்கு ஆளாக இருந்ததை எண்ணி வருந்தினுன். திரு வருள் தன்னை இப்பாவத்திற்கு ஆளாக்காமல் துணைசெய் தத்ற்கு மகிழ்ந்தான். மந்திரிக்கு ஆயுள் தண்டனை விதித் தான். அமரேசனை உபசரித்து மந்திரிப் பதவியில் இருத் தினுன். அமரேசன் மந்திரியாக விளங்கி நீதியைச் செலுத்துவானுயினுன்.

அழகம்மை எழுத்தாளன் மனைவியைச் சந்தித்து, "அம்மா! அன்று சோயிலில் உனது காலில் தைத்த கண்ணுடி ஓட்டை எடுத்துக் கடமையைச் செய்தவள் நான்தான். அன்று நீ கூறிய ஒரு மொழியால் நான் கணவன் உயிரை மீட்கத் திருவருள் துணைபுரிந்தது. உன்னுல் என் கணவன் உயிர் பிழைத்தனர். நானும் சுமங்கலியானேன். திருவேலிறைவன் திருவருள் உனக் குப் பரிபூரணமாகத் துணைபுரிவதாக. நீ என்றும் இன் புற்று வாழ்க" என்று இன்னுரை கூறி மகிழ்ந்தாள்.

அமரேசன் தன் மனைவியை நோக்கி, "பெண்ணே! என் மரணச் சீட்டை மென்று தின்ற உன் கற்புத் திறனை அளக்கவல்லார் யாவர்? உனது அறிவின் திறத்தை எண்ணினுல் மயிர் சிலிர்க்கின்றது. ஆகா! கற்புடைய மனைவியைப் பெற்றவர்க்குப் பெறத்தகாத பேறு என்ன இருக்கின்றது. உனது அரும் பெரும் குணத்தை நினைத் தால் நெஞ்சில் இன்பத்தேன் ஊறுகின்றது" என்று வாயாரப் புகழ்ந்தான். அழகம்மையும் கணவனுடன் சிறந்த வாழ்வில் இனிது வாழ்ந்தனள்.

———